


# பிலிப்ஸ் தரும் சூபர்பவர் ஹை-ஃபை

## புதிய பிலிப்ஸ் ஹை-ஃபை ஸ்டீரியோ ட்யூனர் ஆம்ப்ளிபையர் ஏஎச் 798—இப்போது இரட்டிப்பு சக்தியுடன்!

முந்தைய ஏஎச் 778-ஐ விட மிக உயர்சக்தி படைத்த இந்த ஏஎச் 798, முழுமையான மியூஸிக் பவரான 120 வாட் அளிக்கிறது.

இதன் வகையில் ஒன்றே ஒன்றான இந்த பிலிப்ஸ் ஹை-ஃபை ஸிஸ்டம் மட்டுமே (பிளேயர், ட்யூனர் ஆம்ப்ளி-பையர், ஸ்பீக்கர்கள்) சர்வதேச ஹை-ஃபை DIN தரங்களை எட்டுகிறது. 'ஃப்ளாட் ஃப்ரீக்வன்ஸி ரெஸ்பான்ஸ்', உண்மையான இன்னொலிக்கு உறுதி அளிக்கிறது. இணையற்ற சர்க்கீட்ரி, மிகச் சிறப்பாக மீடியம் வேவ், சிற்றலை மற்றும் எஃப்எம் ஏற்புக்கு உதவுகிறது.

உண்மையைக் கேளுங்கள் : மேம்-பாடடைந்த பிலிப்ஸ் ஹை-ஃபை ஸ்பீக்கர் ஸிஸ்டம் ஏஎச் 476 இப்போது கிடைக்கும் மிகவும் சிறுட்பமான மியூஸிக் ரீப்ரொட்யூஸர். • ஒரு 20 செ.மீ. ஊஃபர், 'பூம்' இல்லாமல் ஆழமான வளம் பொருந்திய 'பாஸ்' தருவதற்கு. • இரண்டு 15 செ.மீ. x 10 செ.மீ. ஸ்க்வாக்கர்கள் குரலை எடுப்பாக எடுத்துக் காட்ட. • ஒரு 5 செ.மீ. சூபர் ட்வீட்டர் தெளிவான, கம்பீரமான உச்ச ஸ்தாயியைக் கேட்டு மகிழ. விரைவிலேயே உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் சூபர்பவர் ஹை-ஃபை கேட்டு ரசிக்க சித்தமாயிருங்கள்.

hi fi

நீங்கள் தொட்டுணரும் ஒலி

**பிலிப்ஸ்**

இந்தியாவில் 50 ஆண்டுகள்

OBM/3664 R TM

# Kalki Shopping Page

உங்கள் அலுவலகம், கடை மற்றும்
இல்லமெங்கும்

## வெஸ்டேர்லி ஃபேன்கள்

அளிக்கும்

### குளிர்ந்த காற்றை அனுபவியுங்கள்

நவநாகரீக இல்லங்கள் மற்றும் அலுவலகங்களுக்கு ஏற்ப தயாரிக்கப்பட்ட வெஸ்டேர்லி ஃபேன்கள், கண்களுக்கு குளிர்ச்சியான நான்கு வித வண்ணங்களில் கிடைக்கின்றன. தனித்தன்மை வாய்ந்த ரெகுலேட்டர் உங்களுக்கு 30% வரை மின்சார செலவை மிச்சப்படுத்துகிறது. வெஸ்டேர்லி – கச்சிதமான, கவர்ச்சிமிகு அழகுடன் அமைக்குள்ளது. அதிக அளவு காற்றையும் அளிக்கவல்லது.

வெஸ்டேர்லி – ஒரு 'டெக்னோகிராட்ஸ் கம்பெனி பி. லிட்., சென்னை 600 058' தயாரிப்பு



இன்றே

**வெஸ்டேர்லி**யை வாங்கிடுவீர்!

national 741

---

## பார்த்தாஸ் டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

### பார்த்தாஸ்
நாகர்கோவில்

கோட்டயம், எர்ணாகுளம்,
சங்கனாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் & K.L.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar

---

## நவசக்தி நிலையத்தாரின்
## உன்னதத் தயாரிப்பு!



**திருஷ்டி நிவர்த்தி யந்திரம் - (ரூ. 42)**
**திருஷ்டி நிவர்த்தி டாலர் - (ரூ. 35)**

(மும்மூர்த்தி அம்சம் கொண்டது)
(பூஜையில் வைத்தது)

- லாரி, கார், ஸ்கூட்டர் ஆகிய வாகனங்களின் விபத்துக்களைத் தடுக்க —
- கறவைப் பசுக்கள் கறவை குறையாமல் பலன்தர —
- வீடு, தொழிற்சாலை, மற்றும் வியாபார ஸ்தலங்கள் செல்வமுடன் விருத்தியடைய —
- கண் திருஷ்டியால் ஏற்படும் உடல் உபாதைகள் வராமலிருக்க —

உறுதுணையாக இருக்கும் சக்திமிக்க சாதனம்!
தபாலில் பெற 25% முன்பணமனுப்பி வி.பி.பி.யில் பெறலாம். விரிவான கேட்லாக்கு பெற 25பை தபால் தலையுடன் எழுதவும்.

**நவசக்தி நிலையம்**
153, [illegible]
சென்னை 600 086 (போன்: 812013)

---

மல்லிகைபோல் மென்மையாகத்
துல்லியமாய் மாவரைக்க....

## "கணேஷ் & சௌபாக்யா"
மாவரை இயந்திரங்கள்



- உத்திரவாத உழைப்பு
- கவர்ச்சிகர அமைப்பு

தயாரிப்பாளர்:

### ஸ்ரீ கணேஷ் இண்டஸ்டிரீஸ்
119, சத்தி ரோடு, ஈரோடு-1.
(போன்: 73513)

HMV
**fiesta**
*popular*



India's largest selling record player.

Max. retail price Rs 519/- including excise duty Local taxes extra

HMV
STEREO 1010



Rs 1530/- Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.

HMV STEREO SYSTEMS

**POPPAT JAMAL & SONS**
36-B Mount Road,
Madras-2 Ph: 88532

**LAKSHMI MUSICALS**
61, Usman Road, Madras-17
Ph: 444629, 442290

**RADIO SERVICES**
10, Mount Road,
Madras-2 Ph: 86091

24, General Patters Road,
Madras-2 Ph: 88089

---

மதுரையில்

# எவர்சில்வர், அலுமினிய

பாத்திரங்கள், பிரஷர் குக்கர் மற்றும் பரிசுப் பொருட்களுக்கு

# ஆனந்தா

## மெட்டல் கம்பெனி

போன்: 31991.

43, காமராஜர் சாலை [கீழவாசல்], மதுரை-9



ஆப்கன்
மாஸ்கோ ஒலிம்பிக்ஸ்
மாஸ்கோ ஒலிம்பிக்கைப் புறக்கணிப்பது போல... இதை
அதில் கலந்து கொண்டு ஒத்துழையாமல்
இருந்தால்...!
மாஸ்கோவின் ஆஃப்கன் நுழைவைக் கண்டிக்க ஒலிம்பிக் டார்ச் வீரர் வந்த வழியே திரும்ப ஓடப் பார்க்கிறார்!
ஓட்டப் பந்தய வீரர்கள் 'GO-SLOW' முறையைக் கையாளலாம்!
எங்கே லாங் ஜம்ப் தாண்ட ஓடி வந்தவன்?...
'லாங் ஜம்ப்' போட்டியில் ஹை ஜம்ப் தாண்டி நிறை வைக்கலாம்!
ப்ளீஸ் ஹெல்ப்!.. ஐ டோண்ட் நோ ஸ்விம்மிங்!
நீச்சல் போட்டிக்கு லைஃப் பெல்ட்டுடன் தோன்றுகிறார்கள் வீராங்கனைகள்!
மல்யுத்தத்திற்கு இப்பேர்ப்பட்ட பலசாலிகள்!


நீ என் டீம் தானே?
'ரிலே' ஓட்டத்திற்கு, ஓட்டை, சோடா பாட்டில் வீரர்கள்!
அதிர்ஷ்டம் உங்களை அழைக்கிறது! ஓட்டப் பந்தயத்துக்கு ஆள் தேவை!.. வா!
ஓடியா ராஜா!.. ஓடியா!
கம்யூனிஸ நாட்டில் உயர்வு தாழ்வுக்கு ஏது இடம்? வெற்றி மேடையும் இதற்கு விலக்கல்ல!
1
2
3
நான் சொல்றேன்.. அடுத்த ஒலிம்பிக்ஸ் ஆஃப்கனிஸ்தானில்!..
ஆஃப்கனில் நடக்கிற ரஷ்யாவின் ஒலிம்பிக்ஸைக் கண்டிப்பது கூட இந்தியாவுக்கு அவமானம்!

# புதிய தலைமுறை

## திரு. எம். எஸ். வேங்கடராமன்

(செயலாளர், தமிழ்நாடு கூடைப் பந்தாட்டச் சங்கம்)

என்ஃபீல்டு நிறுவனத்தில் மக்கள் தொடர்பு அதிகாரியாய்ப் பணியாற்றும் இவரைப் பலரும் அறிவது 'பாஸ்கெட்பால் வெங்கட்ராமன்' என்றுதான்.

கல்லூரியில் படிக்கும்போது சென்னை பல்கலைக் கழகக் குழுவின் காப்டனாக இருந்தார்.

ஏஸ் (A C E) கூடைப் பந்தாட்டக் கழகம் இவர் தொடங்கியது. சென்ற ஆண்டில் இது வெள்ளி விழாக் கொண்டாடியது.

'ஆசிரியரின் பிரம்புக்குப் பயப்படாத மாணவன் கூட விளையாட்டு மைதானத்தில் விஸிலுக்குப் பயந்தாக வேண்டும்' என்று கூறும் எம். எஸ். வி. இளைஞர்களிடையே விளையாட்டு அறிவு ஒன்றுதான் ஒழுக்கக் கட்டுப்பாட்டை உருவாக்க முடியும் என்று நம்புகிறவர்.

ஆரம்ப நாட்களில் கிரிக்கெட்டில் ஆர்வம் கொண்டிருந்த இவர், இப்பொழுது கூறுவது: ''ஐந்து நாட்களையும் ஆயிரக் கணக்கான மனிதர்களின் நேரத்தையும் விழுங்குகிற இந்தவிளையாட்டு இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாட்டுக்குத் தேவையற்றது... இதற்காக ஒரு நாள் விடுமுறை அறிவித்து அரசாங்கங்கள் போஷிப்பதும் அர்த்தமற்றது. பிரிட்டிஷ் ஆட்சியின் ஆதிக்க அடையாளமாகவும் ஆடம்பர வாழ்க்கையின் சின்னமாகவுமே இது விளங்குகிறது.''

த. நா. ஒலிம்பிக் அஸோஸியேஷன் துணைத் தலைவராகவும், அகில இந்திய பாஸ்கெட் பால் ஆட்டக்காரர் தேர்வுக் குழுவிலும் பணியாற்றும் இவர், தமக்கு என்ஃபீல்ட் நிறுவனம் ஊக்கமும் ஒத்துழைப்பும் நல்குவதையும் நன்றியுடன் குறிப்பிடுகிறார்.

## திரு. அருண் பரத்ராம்

(டைரக்டர், ஸ்ரீராம் ஃபைபர்ஸ்)

தில்லியைச் சேர்ந்தவரான திரு அருண் பரத்ராம், டேராடூனில் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் இன்ஜினீரிங் படித்தவர்.

1971ல் ஸ்ரீராம் ஃபைபர்ஸ் நிறுவனத்தில் சேர்ந்த இவர் சென்னைக்கு வந்தது 1973ல். இந்தியைத் தாய் மொழியாகக் கொண்ட இவர், ''தென்னாட்டுக் கோவில்களின் அமைதியான சூழலும், மக்களின் பக்தியுணர்வும் என்னைக் கவர்கின்றன'' என்கிறார்.

தஞ்சாவூர் ஓவியங்கள், கலைப் பொருள்கள் இவற்றைச்சேகரிப்பதில் ஆர்வமுடையஅருண் பரத்ராம், தேர்ந்த ஸிதார்க் கலைஞர். தம்முடைய பத்தாவது வயது முதல் முப்பது வருடங்களாய் ஸிதார் வாசித்து வருகிறார். குரு பண்டிட் ரவி சங்கர். அருண் பரத்ராமின் ஸிதார்க் கச்சேரிகள் சென்னையில் பல சபாக்களில் நடைபெற்றுள்ளன.

கால்ஃப் விளையாட்டிலும் ஈடுபாடுள்ள இவருடைய குறிக்கோள் புதிய தொழில் நுணுக்கங்களைத் தாம் பணியாற்றும் நிறுவனத்தில் அமல்படுத்த வேண்டும் என்பதும், இளம் எஞ்சினீர்களை ஊக்கப்படுத்தவேண்டுமென்பதும்தான்.

டயர் தயாரிப்புக்குத் தேவையான 'நைலான் டயர் கார்ட்', மீன்பிடி வலைகளுக்கான நைலான் நூல்கள் தயாரிக்கும் நிறுவனம் ஸ்ரீராம் ஃபைபர்ஸ்.

## திரு. சு. சமுத்திரம்

(எழுத்தாளர்)

நெல்லை மாவட்டம் திப்பணம்பட்டியில் விவசாயக் குடும்பத்தில் பிறந்த சமுத்திரம் தியாகராயர் கல்லூரியில் பொருளியல் படித்துப் பட்டம் பெற்றவர்.

கிராமிய மணம் கமழ எழுதுவதில் தனித் தன்மை பெற்றவர். எழுத்தில் ''செக்ஸ்'' வக்ரங்களைப் புகுத்துவதைக் கடுமையாகச் சாடுகிறார். அடிப்படைப் பிரச்னைகளான வேலையின்மை, வறுமை போன்றவற்றைக் குறித்து நேரடியாக எழுதுவதை விட்டு, செக்ஸை மையமாக வைத்துஎழுதுவதாலும், ஒன்றுமில்லாத விஷயத்தை ஏதோ பெரிய தத்துவம் போல யாரும் தெரிந்து கொள்ள முடியாத விதமாகக் குழப்பிப் பக்கம் பக்கமாய் எழுதுவதாலும் இலக்கியம் வளர்ந்து விடாது என்று அழுத்தமாய்ச் சொல்கிறார்.

சமுதாயப் பிரக்ஞையுள்ள இந்த இளைஞர் தினமும் அரை மணி நேரம் யோகாசனம் செய்கிறார். தகவல் ஒலிபரப்பு அமைச்சகத்தைச் சேர்ந்த சமுத்திரம் தற்போது 'திட்டம்' இதழின் உதவி ஆசிரியர்.

— சுப்ரபாலன்



✖ அருண் பரதராம் ✖ சு. சமுத்திரம் ✖ எம். எஸ். வேங்கடராமன்

உ

சிவமயம்

# நன்றி அறிவிப்பு

எங்கள் பெற்றோர் திருமதி, திரு. சா. நா. அ. சொ. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில் நேரில் கலந்து கொண்டும், வாழ்த்துச் செய்திகள் அனுப்பியும், விளம்பரங்கள் தந்து உதவியும், வாழ்த்துப் பத்திரங்கள் வழங்கியும், கவியரங்கம் நடத்தியும் விழாவினைச் சிறப்பிக்கச் செய்த அன்பர்கள் அனைவருக்கும் எங்களது உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

திருமதி. திரு. அ. நாராயணன்
,, ,, அ. விஸ்வநாதன்
,, ,, அ. சொக்கலிங்கம்
,, ,, அ. ராமசாமி

காரைக்குடி,
2–7–80

— SHABNAM



அவன் வந்து உக்காந்ததும் நான் மடக்கிக் கறேன்!
அந்தம்மா காலை மடக்கின பிற்பாடு தான் நான் வந்து உக்காருவேன்!
சமரசப் பேச்சு
சக அமைச்சர்களின் எதிர்ப்பு
சென்னா ரெட்டி
கோரிக்கை
அ.தி.மு.க.வும் தி.மு.க.வும் இணையும் கோரிக்கை

1980 ஜூலை 20
ரௌத்திரி ஆடி 5
மலர்: 38 இதழ்: 51



கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ஒரே ஒரு நிமிஷம்!

உலகில் பகை உணர்வு ஒரு பக்கம் அதிகரித்து ஆக்கிரமிப்புக்கள் நடக்கும் போதே இன்னொரு புறம் அன்பு அற்புதங்களை நிகழ்த்தி இதயங்களை ஆட் கொள்கிறது. எத்தனையோ விதங்களில் மேனாடுகள் நமக்கு உதவி நமது நன்றிக்குப் பாத்திரமாகியுள்ளன.

அவற்றுள் சமீபத்திய ஒரு சிறப்பான அன்புப் பணியை மேற்கு ஜெர்மானியர் நிகழ்த்தியுள்ளனர். சென்னை நகருக்கு மேற்கு ஜெர்மானிய மக்கள் ஒரு புதிய தொழுநோய் மருத்துவ மனையையே பரிசாக வழங்கியுள்ளனர்.

அண்ணல் காந்தியடிகள் ஒரு தொழுநோயாளிக்குப் பணிவிடை செய்யும் புகைப்படத்தை நாம் எத்தனை தடவை பார்த்திருக்கிறோம்? அதிலிருந்து நாம் என்ன கற்றறிந்தோமோ இல்லையோ மேற்கு ஜெர்மானியர் நன்றாக உணர்ந்திருக்கின்றனர். அன்புப் பணிகளிலெல்லாம் சிறந்தது நோய் தீர்க்கும் நற்பணிதான்; மனிதாபிமானப் பணிதான் என்று தெரிந்து கொண்டு செயல்பட்டிருக்கின்றனர்.

உலகெங்கிலும் தொழு நோயால் பீடிக்கப்பட்டவர்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் இந்தியாவில்தான் உள்ளனர்! அதிலும் இங்குள்ள பெரிய நகரங்களில் தொழு நோயாளிகளின் எண்ணிக்கை மித அதிகமாகி விட்டிருக்கிறது. ஆயிரம் பேரில் இருபது பேர் தொழு நோயாளிகள்!

ஜெர்மனியில் உள்ள தொழுநோய் நிவாரண சங்கம் தனது பிராந்தியக் காரியதரிசி வில்லியம் கெர்ஷான் மூலமாக இங்கு செயல்படுகிறது. கிரெமால்டெஸ் என்ற பெயரில் சென்னையில் இயங்கும் அமைப்பு தொழுநோய்க்கு இலவச சிகிச்சை அளிக்கிறது. அது மட்டுமல்ல, தொழுநோய் எந்தெந்த பிராந்தியங்களில் யார்யாருக்குப் பரவியுள்ளது என்று தீவிரமாக ஆராய்ச்சி நடத்தி, புதிய கேஸ்களைக் கண்டு பிடிக்கவும் செய்கிறது. சிகிச்சை பெற்றுக் குணமடைந்தவர்கள் தங்கள் உறுப்புக்களை நன்கு பயன்படுத்த பயிற்சி அளித்து, அவர்கள் தொழில் நடத்தவோ வேலையில் அமரவோ உதவுகிறது. தொழுநோய் பற்றிய அறிவு மக்களிடம் பரவ உழைக்கிறது. எல்லாமே இலவசம்தான்.

கிரெமால்டெஸ் 1971ல் 426 நோயாளிகளுக்கு சிகிச்சை அளித்தது. 1980ல் எண்ணிக்கை 21, 240 ஆக உயர்ந்திருக்கிறது! இவர்களில் 56.2 சதம் பதினான்கு வயதுக்குக் குறைவான சிறுவர் சிறுமியர் என்பது மனத்தை உருக்குகிற அம்சம்.

கிரெமால்டெஸ் கேந்திரம் தான் செய்யும் நற்பணிக்குப் பிரதியுபகாரமாக நம்மிடமிருந்து ஒன்றை எதிர்பார்க்கிறது. வேறு ஒன்றுமில்லை, தொழு நோய் பற்றிய உண்மைகள் சிலவற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். பிறருக்கும் அதை எடுத்துச் சொல்ல வேண்டும். அதன் மூலம் இந்த நோயை இந்தியாவிலிருந்தே ஒழித்துக்கட்ட நாம் உதவவேண்டும். 'இதற்காக நாளைக்கு ஒரு நிமிஷ நேரம் செலவிடுங்கள் போதும்' என்கிறது. நாம் தெரிந்து கொண்டு பிறருக்கும் கூற வேண்டிய அந்த விவரங்கள் என்ன?

1. தொழுநோய் முற்றிலும் குணப்படுத்தக் கூடிய ஒன்றே. நவீன மருந்துகள் இதைச் சாத்தியமாக்குகின்றன.

2. தொழுநோய் ஒட்டுவாரொட்டிதான். ஆனால் எல்லா தொழு நோயாளரும் இந்நோயைப் பரப்புவதில்லை. 85 சதவிகிதத்தினரால் நோயைப் பரப்பவே முடியாது. 15 சதவிகிதத்தினரால் தான் பரப்பமுடியும்.

3. இந்தப் பதினைந்து சதவிகிதத்தினரால் தான் ஆபத்து அதிகம். ஏனெனில் ஆரம்ப கட்டங்களில் இவர்களுக்கு இந்த நோய் வந்திருப்பது வெளிப்படையாகத் தெரியாது. அவர்கள் மற்ற எல்லோரையும் போல் எல்லா இடங்

களிலும் சர்வசாதாரணமாக வளைய வந்து கொண்டிருப்பார்கள். நோய் பரப்பிக் கொண்டிருப்பார்கள்.

4. எனவே, தொழுநோய் கண்டவர்களை ஆரம்பத்திலேயே கண்டு பிடித்து உடனுக்குடன் சிகிச்சை அளிப்பதன் மூலம் தான் இந்த நோயை முழு மையாக வெற்றி கொள்ள முடியும். ஆரம்ப கட்டத்திலேயே கண்டுபிடிப்பது எப்படி? உடலின் எந்தப் பகுதியிலாவது தோலின் ஒரு சிறு பகுதி உணர்ச்சி யற்றுப் போனால் தொழுநோய் தாக்கியுள்ளதாக அர்த்தம். உடனே மருத்து வரை அணுகி சிகிச்சை பெறவேண்டும். சங்கோஜப்பட்டு டாக்டரை அணுகா திருந்து நோய் வளரவும் பிறருக்குப் பரவவும் இடம் தந்து விடக் கூடாது.

கிரெமால்டெஸ்ஸின் அறிவுரையைக் கடைப் பிடிப்போம். மலேரியாவை யும் பெரியம்மையையும் ஒழித்தது போல் தொழுநோயையும் நாட்டிலிருந்தே விரட்டி வெற்றி காண்போம்.

---



கல்கி பத்திரிகை எத்தனையோ சிறப்பிதழ் களை வெளியிட்டிருக்கிறது. இருந்தாலும் இல் லஸ்டிரேட்டட் வீக்லியின் சாமர்த்தியம் கல் கிக்கு இல்லைதான். ஒப்புக் கொள்ளவே வேண்டும்.

வீக்லி ''ஸெக்ஸ்'' சிறப்பிதழை அறிவித் திருக்கிறது! சினிமாவில் செக்ஸ் இடம் பெறுவது பற்றிப் பக்கம் பக்கமாக அலசப் போகிறார்களாம்!

சினிமாவில் ஸெக்ஸ் இடம் பெறுவதால் ஒன்றும் குடிமூழ்கிப் போய்விடாது என்ற கருத்துடையவர்கள்; சினிமாவில் ஸெக்ஸ் காரணமாகத்தான் சமுதாயமே சீரழிகிறது என்று அபிப்பிராயப்படுகிறவர்கள் ஆகிய இரு சாராருக்கும் வீக்லி இடமளிக்கும் என்பது நிச்சயம். அதோடு இரு தரப் பினரது கட்டுரைகளுக்கும் சாட்சியம் போல ஏராளமான செக்ஸ் படங்களைப் பிரசுரிக் கலாம். ரொம்ப வசதி! வீக்லி அமோகமாக விற்பனையாகும்.

வீக்லியை விடக் கெட்டிக்காரத்தனமாக நடந்துகொள்ளும் தமிழ்ப் பத்திரிகைகளுக் கும் பஞ்சமில்லை. இவர்கள் சிறப்பிதழ் என்று பறைசாற்றாமல், விளம்பரம் இல்லா மல் ஒவ்வொரு இதழையுமே ஸெக்ஸ் சிறப் பிதழாக வெளியிட்டு வருகிறார்கள்! எவ் வளவு அடக்கமான அமைதியான சமுதாயப் பணி!

● ● ●

மனித குலம் அழிந்து விடாமல் இருக்க ஸெக்ஸ் அவசியமாகிறது. பிரஜோற்பத்தி நடக்க வேண்டும் என்பதால் இறைவன் அதில் இன்பத்தை இணைத்தான். இந்த இன்பத்தை அனுபவிக்கும் மார்க்கம் அரசியல் சட்ட திட்டங்களுக்கும் சமுதாயக் கட்டுப் பாடுகளுக்கும் உட்படாதபோது அது குற்ற மாகிறது. ஸெக்ஸ் குற்றங்களுக்கு அடிப் படை மிருகத்தனமான ஆசை. மிருகத் தனமான ஆசை கிளர்ந்தெழப் பல அம் சங்கள் காரணமாகின்றன. ஸெக்ஸ் குற்றங் களை அலசி ஆராய்ந்த போலீஸ் உயர் அதி காரி புரன் பாட்ரியா காரணங்களை அடுக்கு கிறார்.

(1) குடும்பச் சூழ்நிலை சந்தோஷமாக இல் லாதது. (2) இறைவனிடத்தில் பய பக்தி இல்லாததும், அதன் விளைவாக தார்மீக நம் பிக்கைகளில் பற்று இழப்பதும். (3) வர தட்சணை போன்ற காரணங்களால் சீக்கிரம் திருமணம் நிகழாமல் இருப்பது. (4) தொழில் வளர்ச்சி — கிராமத்தில் மனைவியை விட்டு விட்டு கணவன் மட்டும் வேலை தேடி தொழில் வளம் மிக்க பட்டணத்துக்கு வருவது; இரு தரப்பினரின் தனிமை. (5) சேரிகள், ஒண்டுக் குடித்தனங்கள் — ஒரே அறையில் கணவன் மனைவி, குழந்தைகளுடன் வசிக்க நேர்வது. தாய் தந்தையரின் உடலுறவைக் குழந் தைகள் காண நேர்வது. (6) சினிமா.

● ● ●

ஆபாசமானசினிமாக்காட்சிகளை ஸெக்ஸ் குற்றங்களுக்கு மூன்றாவது முக்கிய காரண மாகக் குறிப்பிடுகிறார் பாட்ரியா. முதல் இரண்டு இடங்களைப் பெறுபவை சமூகமான குடும்பச் சூழ்நிலை இல்லாததும் இறை யுணர்வு குறைந்து போனதும்.

திருமணத்துக்கு முன்பே உடலுறவு கொள் வது பற்றிப் பல பெண்களை வினவியபோது, ''அதிலென்ன தவறு? நீரா பன்னு சினிமா பார்த்தேனே. அதில் ராகியும் தேவ் ஆனந் தும் ஹாங்காங்கில் கல்யாணத்துக்கு முன்பே உடலுறவுகொள்ளத்தானே செய்கிறார்கள்?'' ''பாபி படத்தில், ஹம் தும் ஏக் கம்ரே மே பந்த் ஹோ என்று பாட்டு ஒலிக்கவில்லையா? ரிஷி கபூரும் டிம்பிளும் கல்யாணத்துக்கு

முன்பே உடலுறவு கொள்வதைத்தானே அது குறிப்பிடுகிறது?'' என்று இவ்வாறு பல சினிமாக் காட்சிகளைக் குறிப்பிட்டுத்தான் ஒவ்வொரு பெண்ணும் அதனை நியாயப்படுத்தினாளாம்!

இப்போது சினிமாவுடன் போட்டி போட ஆரம்பித்துவிட்டன பத்திரிகைகள்.

• • •

தென்னாட்டில் மலையாளப் படத் தயாரிப்பாளர்கள் செக்ஸ் ஸப்ஜெக்டுகளை சக்கை போடாக எடுத்துப் பணம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். கேரளத்தில் மட்டுமல்ல, எல்லா மாநிலங்களிலும் மலையாளப் படங்கள் பணம் குவித்தன. 'மலையாளம் புரியாதிருக்கலாம். ஆனால் செக்ஸைப் புரிந்து கொள்ள மொழி எதற்கு?' என்ற ரீதியில் இவர்கள் இயங்கினர். இந்தப் போக்கு தற்போது குறைந்திருக்கிறது என்றால் அதற்குக் காரணம் கேரளாவின் கம்யூனிஸ்டு மார்க்ஸிஸ்டு முதல்வர் நாயனார்தான்.

கேரளத்தில் எடுக்கப்படும் படம் எதுவானாலும் ரூ. 50,000 உதவித் தொகை அளிக்கப்படும் என்றிருந்த நிலையை மாற்றினார் அவர். ''மோசமான படங்கள் எடுக்க அரசு உதவி செய்வது, ஆதரவு அளிப்பது என்பது மாபெரும் தவறு. யார் என்ன என்ன குறை கூறினாலும் சரி, விட்டுக் கொடுக்க மாட்டேன். வெளிப்படையாக விவாதம் நடந்து, நல்ல படம்தான் எடுக்கப்படவிருக்கிறது என்பது உறுதியான பின்னர்தான் அரசாங்க உதவி கிட்டும்'' என்று அறிவித்தார்.

• • •

பொதுமக்களிடம் போலீஸார் தகாத முறையில் நடந்து கொள்ளும்போது மக்கள் சீறித்தெழுகின்றனர். மாயாவுக்கு ஏற்பட்ட துன்பத்தை யொட்டி இன்னமும் கோப தாபங்கள் அடங்கவில்லை. ஆனால் போலீஸாருக்கு மக்கள் அநீதி இழைக்கும் போது அது பற்றி யாரும் அதிகமாகப் பேசுவதுகூட இல்லை. பத்திரிகையில் படித்த சூட்டோடு அதை மறந்தும் விடுகின்றனர்.

தாச்சநல்லூர் காவல்நிலையத்தில் ஹெட் கான்ஸ்டபிள் சையத் அப்துல்லாவை அரிவாளால் தாக்கியிருக்கிறார் பிச்சையாத் தேவர். தற்போது சையத் அப்துல்லா திருநெல்வேலி மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

ராஜகுரு என்ற போலீஸ்காரரை சிவகாசியில் இரண்டு பேர் குத்திக் கொன்றிருக்கிறார்கள். ஹெட் கான்ஸ்டபிள் சையத் அப்துல்லாவும் சரி, கான்ஸ்டபிள் ராஜகுருவும் சரி தம் கடமைகளைச் செவ்வனே ஆற்றியது தவிர வேறு ஒரு குற்றமும் புரியவில்லை.

அதிலும் ராஜகுரு திருடர்களால் தாக்கப்பட்ட பிறகு நெஞ்சிலிருந்து குருதி பொங்கிய போதிலும் காவல் நிலையத்தை நோக்கி ஒரு பர்லாங் தூரம் சென்றிருக்கிறார். அதற்கு மேல் உயிர் உடலில் தங்காததால் தரையில் சாய்ந்திருக்கிறார்.

நமக்காக, உயிராபத்தான பணியில் ஈடுபட்டுள்ள போலீஸாருக்கு உரிய மதிப்பளித்துப் போற்றவும் பழகுவோம்.

• • •

''இந்தியாவில் மத்திய அரசும் சரி, மாநில அரசுகளும் சரி, இன்னும் சில ஆண்டுகளுக்குப் புதிதாக யாரையுமே வேலைக்கு நியமிக்கக் கூடாது; இருக்கிறவர்களைக் கொண்டே உள்ள காரியங்களைக் குறைவின்றி நிறைவேற்றி முடிக்கவேண்டும்'' என்று பால்கிவாலா அண்மையில் யோசனை தெரிவித்தார். இதனால் நாளாவட்டத்தில் அரசாங்கத்தின் உற்பத்திக்கு உதவாத செலவினங்கள் குறையும். இந்தக் கொள்கையின் விளைவாக வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும் என்று யாரும் எண்ணத் தேவையில்லை. ஏனெனில் இதனால் அரசுக்கு மிச்சமாகும் தொகை வேறு உற்பத்திக்கு உதவும் இனங்களில் முதலீடாகி வேலை வாய்ப்புக்கள் பெருகவே செய்யும். பொருளாதாரமும் பலப்படும். அரசு அலுவலகங்களில் ஒருவர் செய்யக் கூடிய வேலைக்கு ஒன்பது பேர் நியமனமாகியுள்ள நிலை மாறும்.

பிரிட்டனில் பிரதமர் மார்கரெட் தாட்சர் புதிதாக யாரையும் அரசு அலுவலகங்களில் வேலைக்கு அமர்த்தாததால் இருக்கிற அரசு ஊழியர்களின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்து வரக் காண்கிறார். 1979ல் அரசு ஊழியர் எண்ணிக்கை நான்கு சதவிகிதம் குறைந்தது 1984க்குள் மேலும் பதினான்கு சதவீதம் குறையும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. பிரிட்டிஷ் மக்களுக்கு உள்ள ஒரே குறை. 'அரசு ஊழியர் குறைவது போல் அமைச்சர்களின் எண்ணிக்கை குறையவில்லையே' என்பதுதான். மார்க்ரெட் தாட்சர் அமைச்சரவையில் மந்திரிகளின் எண்ணிக்கை 106!

இந்தியாவில் உற்பத்தி பெருகுகிறதோ இல்லையோ, அமைச்சர்களும் அரசு ஊழியர்களும் எண்ணிக்கையில் நாளுக்கு நாள் பெருகி வருகிறார்கள். ஏதோ அந்த ஒரு விஷயத்திலாவது அபிவிருத்தி காண்கிறோமே என்று நாம் மகிழ வேண்டியதுதான்!

## செய்திகள் வாசிப்பது 'செம்பியன்'




# வட்ட மேஜை

● 'ஜூன் 13, 14 தேதிகளில் நடந்தது என்ன?'' என்ற தலைப்பிட்டு ஒரு கட்டுரை வெளியிட்டுள்ளீர்கள். ரிஸர்வ் பாங்கில் கிளியரிங் ஹவுஸ்ஸில் 54 வங்கிகளின் பிரதிநிதிகள் கூடும் இடம் நெருக்கடியானது. நூற்றுக்கும் அதிகமான நபர்கள் பணியாற்ற வேண்டியுள்ளது. ஒவ்வொரு நாளும் ஏறத்தாழ 35,000 காசோலைகள் பரிமாறிக்கொள்ளப்படுகின்றன. ஒரு வங்கிக்கான காசோலை மின் விசிறி காற்றால் அடுத்துள்ள வங்கிக்கான கூடுதலில் செல்லுமேயானால் அது மறுநாள் தான் எம் கைக்குக் கிட்டும். இதனால் இடையூறு வாடிக்கையாளருக்கு நிகழக் கூடாது என்பதால்தான் நாங்கள் அந்த அறையைக் குளிர்பதனப்படுத்தக் கோருகிறோம். இது நீண்ட நாள் கோரிக்கை.

பிறிதொரு கோரிக்கை குளிர் நீர் சாதனம். நம் வீட்டில் அல்லது அலுவலகத்தில் இச்சாதனம் கழிவறைக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தால் நாம் அருந்துவோமா? சிந்தியுங்கள். நாங்கள் அதனை எம் அறைக்குள்ளேயே பொருத்த வேண்டுகிறோம். தவறு?

சென்னை வங்கிகள் கிளியரிங்
ஹவுஸ் பிரதிநிதிகள் சார்பாக

ப. பாலசுப்பிரமணியம்
(தேனா வங்கிப் பிரதிநிதி)

● ஜூன் 13, 14ல் நடந்தது என்ன?'' என்ற துணைத் தலையங்கம் ரொம்ப 'டைம்லி'. பாங்குகளில் கிளார்க்குகளின் நன்னடத்தை விதி முறைகள் பல இருந்தும் இவைகள் பெரும்பாலும் ஏட்டளவில் நிற்கின்றன. அனுஷ்டிக்கப்படுவதில்லை. காரணம் வாடிக்கையாளரின் நலனை மனத்தில் கொண்டு மானேஜர் நன்னடத்தை விதி 'முறையைச் செயல்படுத்த முற்பட்டால் வந்தது அனர்த்தம்: ஒரு நாளைக்கு ஆறரை மணி நேரம் வேலை செய்ய வேண்டும். சரி. ஆனால் அந்த ஆறரை மணி நேரத்தில் எவ்வளவு வேலை செய்ய வேண்டும் என்று எங்கே எழுதியிருக்கிறது? என்று விதண்டாவாதம் செய்வார்கள்.

மேலும் காரணம் கேட்டால் மற்ற பாங்கு தோழர்களுடன் சேர்ந்து நடக்கும் ஓரளவு வேலையையும் நிறுத்த, வாடிக்கையாளர்கள் ஆபீஸர்களைக் கேட்க, ஆபீஸர்கள் மானேஜரைச் சாட, மானேஜர் மேலதிகாரிகளை நாட, மேலதிகாரிகள் தொழிற் சங்கத் தலைவரைத் தேட, கவரொட்டிகள் விசுவரூபம் எடுக்க, தோழர்கள் ஆர்ப்பாட்டம் செய்ய...

தினமும் ஒத்திகை நடக்கும் இந்த நாடகத்தில் திருவாளர் 'வாடிக்கையாளரு'க்கு எப்பொழுதும் ஒரே ரோல்தான் — அப்பாவி காரக்டர்!

முடிவு? தெரிந்ததுதானே? வாடிக்கையாளர்களுக்கு: 'தங்களுக்கு ஏற்பட்ட அசௌகரியங்களுக்கு வருந்துகிறோம்' மானேஜருக்கு: 'ஊழியர்களைச் சாதுர்யமாகச் சமாளித்திருக்க வேண்டும். இனியாவது இதை மனத்தில் கொள்ளுங்கள்.''

பிலாய் — என். எஸ். ராஜம்

● ஒரு தலை ராகம் எனத் தலைப்பிட்டு ஒருதலை ராகத்துக்கு மேலும் மெருகூட்டி விட்டீர்கள். நான் இதுவரை 8 தடவை பார்த்தேன். இன்னும் ஒரு தடவை பார்க்க வைத்து விட்டீர்கள்!

சின்ன காஞ்சீபுரம் — கோ. நாராயணன்

● படத்தின் காட்சியை அட்டையில் பிரசுரித்துச் சிறப்பான ஒரு கட்டுரையும் தந்து புதுமைக்கு, புரட்சிக்கு கல்கியின் ஆதரவு என்றும் உண்டு என்பதை நிரூபித்து விட்டீர்கள்!

நெம்மேலி — ரங்கநாயகி கிருஷ்ணமூர்த்தி

● ''ஒரு தலை ராகம்'' படத்தில் இரண்டு ஜீவன்களுக்கு இடையே நல்லெண்ணத் தூதுவராக விளங்கிப் பளிச்சென்று பேசி அனைவரின் சிந்தனையையும் கவர்ந்த உஷாவின் நடிப்பைப் பற்றி ஒன்றும் கூறாமல் விட்டு விட்டீர்களே! அந்த அழகி உஷா நம் ராஜ நர்த்தகி சுவர்ணமுகியின் தங்கை சார்!

மேட்டுப்பாளையம் — பி.ஏ. வஹாத்

● சஞ்சய் காந்தியின் இறுதிச் சடங்குகள் சம்பந்தப்பட்ட புகைப்படங்களையும் செய்திகளையும் படித்தவுடன் என் நெஞ்சே வெடித்து விடும்போலிருந்தது.

ஈரோடு — ''செம்மறியன் 205''

● வி.வி. கிரி பற்றிய பல விவரங்களையும் கருத்துக்களையும் மிகவும் தெளிவாக விளக்கிய பத்திரிகை கல்கிதான். கட்டுரையைப் படித்ததும் நாம் எவ்வளவு பெரிய தலைவரை இழந்துவிட்டோம் என்று சோகம் கவ்வியது.

சிவகாசி — இரா. சுரேஷ்குமார்

● இரண்டு வாரமாக வெளிவந்த தமிழக முதல்வர் பேட்டி வெகு சிறப்பு. தரமான கேள்விகளுக்கு உரமான பதில்களைச் சொன்ன தோடல்லாமல் ''உயர் ஜாதி எனக் கருதப்படுகிறவர்கள் பரம ஏழையாக இருக்கிறார்கள்; இங்கே ஜாதிப் பிரச்னை எங்கே வந்தது?'' என்னும் இடத்தில் சமுதாயத்தினை எவ்வளவு தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்? உண்மையிலேயே மக்களுக்குச் சேவை என்ற வார்த்தைகளுக்கு உகந்தவர்;

பரசலூர் — ஆர். நாகராஜன்

மல்லப்பன் இறந்து விட்டான் என்ற செய்தி எனக்கு அவ்வளவு அதிர்ச்சி அளித்திருக்க வேண்டிய அவசியமில்லைதான். இரண்டு மூன்று மாதங்களாகவே எந்த நிமிஷமும் அந்தச் செய்தியை நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். எனினும் சட்டென்று அந்தச் செய்தி என் காதில் விழுந்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போடவே செய்தது.

''மல்லப்பன் இறந்துவிட்டானு? எப்போ?'

''இன்னிக்குக் காலையிலதானும். அவனோட மகன் வந்து சொல்லிவிட்டுப் போனுன். கடைசிக் காரியங்களுக்குக் கூடக் கையில் பணமில்லேன்னு முறையிட்டான். நீங்க வந்தப்புறம்தான் ஏதாவது செய்ய முடியும்னு சொல்லி அனுப்பிட்டேன்.''

உதவியாளர் இப்படிக் கூறிக் கொண்டிருக்கும்போதே ஆபீஸ் பையன் வந்து தகவல் கொடுத்தான்: ''சார், மல்லப்பனோட மகன் ஐயாவைப் பார்க்க வந்திருக்கான்.''

''வரச் சொல்லு.''

மாரி ஏதோ ஒரு மோட்டார் ரிப்பேர் பட்டறையில் வேலை செய்து கொண்டிருந்தான். குறுகலான உடம்பு. குடுக்கை தட்டிய முகத்தில் வயதுக்கு மீறிய முற்றல் களை.

'என்ன மாரி? உன்னோட அப்பா...''

''கதை முடிஞ்சு போச்சுங்க. நல்லகாலம் வீட்டிலயே உயிரை விட்டாரு. எங்கயாச்சும் வெளியே சுத்தும்போது உயிர் போயிருந்தால் அனுதைப் பிணமாக் கிடந்திருப்பாரு. வேண்டாத பழிச் சொல்லுக்கு ஆளாகாமல் தப்பினேன்'' என்ருன் மாரி,

''உன் அதிர்ஷ்டம்தான். அது சரி. மேற்கொண்டு நடக்க வேண்டியதற்கு நீ கவலைப் படவேண்டாம். ஆபீஸ் சார்பில் எல்லா ஏற்பாடும் செய்யச் சொல்றேன். நீ போய் ஆகவேண்டியதைக் கவனி.'' என்று கூறி மாரியை அனுப்பிய பிறகு, மல்லப்பனின் நினைவுக்கு மரியாதை செலுத்தும் வகையில் என்னென்ன செய்ய வேண்டும் என்று உதவியாளரிடம் விவரித்துச் சொல்லி உடனடியாக அவற்றுக்கு ஏற்பாடு செய்யும்படி பணித்துவிட்டு மற்ற வேலைகளில் கவனத்தைச் செலுத்த முயன்றேன்.

மல்லப்பனின் மறைவு பற்றி என் மனத்தில் இந்தத் தவிப்பு ஏன்? நெருங்கிய உறவினரைப் பறி கொடுத்து விட்டது போன்ற துயரம் என் நெஞ்சைப் பிழிவானேன்? பார்க்கப் போனுல் மல்லப்பன் காரியாலயத்திலிருந்து ஓய்வு பெற்ற டிரைவர் என்பதைத் தவிர வேறு என்ன உறவு எனக்கும் அவனுக்கும்? ஆனுல் அவன் இறந்துவிட்டான் என்ற செய்தி என்மனத்தை இப்படி ஏன் உலுக்க வேண்டும்?

''நான் லேசில் சாகமாட்டேன் தம்பி சார்! சாவு என்கிட்ட நெருங்கவே பயப்படும்! என் உடம்பைப் பார்த்துச் சொல்லு! இந்த 'உடம்புக்குச் சாவு வருமா என்னிக்காவது?'' இருபது வருடங்களுக்கு முன்னுல் மல்லப்பன் பேசிய இந்த வார்த்தைகள் இன்னும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றனவே!

பெயருக்கேற்றபடி மல் யுத்தம் செய்யத் தயாராக இருப்பவனைப் போலத்தான் இருக்

# தம்பி சார், ஒரு ரூபா!



கும் மல்லப்பனின் தோற்றம். வாட்ட சாட்டமான உருவம். பழுவேட்டரையர் மீசை. அவனை முதல் முதலில் பார்த்தபோது அவன் அகம் பாவம் பிடித்த ரௌடியாக இருப்பானோ என்று நான் அஞ்சியது உண்டு. பழகப் பழகத்தான் அவனுடைய உண்மை இயல்புகளை நான் புரிந்து கொள்ள முடிந்தது.

எங்கள் நிறுவனம் தயாரித்த உழவு இயந்திரங்களைப் பற்றிக் கிராமப்புறங்களில் விவசாயிகளுக்கு நேரில் எடுத்துச் சொல்லும் பணியை நான் அப்போது செய்து கொண்டிருந்தேன். பெரும் பாலும் மல்லப்பன்தான் ஆபீஸ் காரை ஓட்டிக் கொண்டு வருவான். அடிக்கடி வெளியூர்களுக்குச் செல்லும் அவசியம் எனக்கு இருந்ததால் அவனுடன் நெருங்கிப் பழகுவதற்கான சந்தர்ப்பங்கள் நிறையவே நேர்ந்தன.



மனைவி: "தேடி வருகிற நண்பர்களை வாசலிலேயே நிறுத்திப் பேசி அனுப்பிச்சிடறீங்களே... ஏன்?"

கணவன்: "டி.வி. வாங்காமல் வெறும் ஐம்பதுக்காக டி.வி. அண்டெனாவை மொட்டை மாடியில் கட்டி வைத்திருக்கும் என் குட்டு வெளிப்பட்டுடு மோன்னுதான்!" -உ. ராஜாஜி



வயதில் மட்டுமல்ல, உருவத்திலும் நான் மல்லப்பனை விட எவ்வளவோ சிறியவன். அதைப் பயன்படுத்திக் கொண்டு அவன் என்னைத் 'தம்பி' 'தம்பி' என்றே உரிமையுடன் அழைத்து வந்தான். ஆபீஸ் மரியாதையைக் கருதி 'சார்' என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொள்வான்.

மல்லப்பன் வழக்கமாக எடுத்து வரும் வண்டி வருடாந்தர சர்வீஸுக்குப்போயிருந்ததால் ஜீப்பில் புறப்பட்டுப் போகும்படி ஆயிற்று. நீலகிரி மாவட்டத்தில் சுற்றுவதற்கு அந்த ஜீப் வசதியாகவும் இருந்தது. கூடலூர்ப் பகுதி யெல்லாம் சுற்றிவிட்டு ஊட்டிக்குச் செல்லும் வழியில் முதுமலைக் காடுகளைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பத்தை நான் தெரிவித்தபோது,

"அதுக்கென்ன தம்பி சார்! அந்த வழியாகவே போயிடலாம். அந்தப் பக்கத்தில் ஊட்டிக்குப் போற பழைய பாதை இருக்கு. உனக்கும் அது புது அனுபவமாயிருக்கட்டுமே!" என்றான் மல்லப்பன்.

முதுமலைக் காடுகளைப் பார்த்தவாறு நாங்கள் ஊட்டிக்குச் செல்லும் பழைய மோட்டார் பாதையை எட்டியபோது நன்றாக இருட்டி விட்டிருந்தது.

ஜீப்புக்குப் பொறுக்கவில்லை போலும்! எக்கச்சக்கமான ஒரு கொண்டை ஊசி வளைவில் சட்டென்று மேலே நகர மறுத்துவிட்டது அது! ஆஃப் ஆன எஞ்சினை மீண்டும் ஸ்டார்ட் செய்ய மல்லப்பன் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. நல்ல வேளையாக வளைவின் சமதரைப் பகுதியில்தான் ஜீப் அவ்விதம் இடக்குச் செய்திருந்தது. ஒரு பக்கமாக வண்டியை ஒதுக்கித் தள்ளி நிறுத்துவதற்கும் வசதி இருந்தது.

"தம்பி சார், சைட் ஸ்கிரீன் ரெண்டையும் இழுத்து விட்டுட்டு நீ வண்டிக்குள்ளேயே படுத்திரு. குளிருக்கு அடக்கமாக டார்பாலினை எடுத்துப் போத்திக்க."

"நீ?"

"என்னைப் பத்திக் கவலைப் படாதே. நான் முன்சீட்டில உட்கார்ந்தாப்பலயே தூங்கிக்குவேன்!"

"முன் சீட்டில மறைப்பும் கிடையாது. போத்திக்கவும் ஒண்ணுமில்லே. குளிர்ல விறைச்சுப்போயிடுவே மல்லி" என்றேன் கவலையுடன்.

மல்லப்பன் அலட்சியமாகச் சிரித்தான்.

"குளிர் என்னை என்ன செய்திடும்? நான் செத்தா போயிடுவேன்?" இவ்வாறு கேட்ட பிறகுதான் அவன் இப்போதும் என் மனத்தில் ரீங்கரித்துக் கொண்டிருக்கும் அந்த வார்த்தைகளைக் கூறினான்.

இரவு முழுவதும் ஜீப்பிலேயே அந்த நீலகிரிக் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்து விட்டுக் காலையில் கண் விழித்தபோது எனக்கு உடம்பு முழுவதும் பூட்டுப் பூட்டாக வலித்துக் கொண்டிருந்தது. கண்ணெரிச்சலும், மண்டைக் குடைச்சலும், வரப்போகிற காய்ச்சலுக்குக் கட்டியம் கூறிக் கொண்டிருந்தன. ஆனால் மல்லப்பனோ எனக்கு முன்பே சொடுக்கெடுத்தாற்போன்ற துள்ளலுடன் கண் விழித்து, சோம்பலோ ஆயாசமோ இல்லாமல் ஜீப்பின் பானட்டைத் திறந்து அதன் சண்டித்தனத்துக்குக் காரணம் என்னவென்று ஆராய்வதில் ஈடுபட்டான். சுத்தே நிமிடத்தில் அந்தக் குறைபாட்டைச் சரி செய்தும்விட்டான்.

மலையின் ஏற்றத்தில் வண்டி ஒரே சீராகச் செல்லத் தொடங்கியதும்தான் மல்லப்பன் பேசினான். "என்ன தம்பி சார்? நல்லாத் தூங்கினியா?"

"குளிர் ஆட்டி எடுத்திடுச்சு. தூக்கமே பிடிக்கலே" என்று நான் கூறியதும் அவன் அட்டகாசமாகச் சிரித்தான். "நான் அடிச்சுப் போட்டாப்பலே தூங்கினேன்!"

"நானும் கவனிச்சேன் மல்லி! எனக்குத் தூக்கம் பிடிக்காததற்கு உன் குறட்டையும் ஒரு காரணம்! நடுநடுவே ஏதேதோ பேசிக்கிட்டிருந்தே!"

"அப்படியா? ரொம்பப் பேசிட்டேனா?"

"வார்த்தைகள் புரியலே. ஆனா யாரைப் பத்தியோ வருத்தமா உன் மனசில! அந்த வருத்தமும் ஆத்திரமும்தான் அப்பப்போ வார்த்தைகளா வெடிச்சு வந்துக்கிட்டிருந்ததா? யார் மேலே கோபம் மல்லி?"

"ஒண்ணும் கேக்காதே தம்பி சார்!" என்று வெடுக்கென்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்த மல்லப்பன் அப்புறம் ஊட்டிக்குப் போய்ச் சேரும் வரை வாயே திறக்கவில்லை.

அடுத்த முறை நான் வெளியூர்ப் பயணம் மேற்கொண்டபோதுதான் இந்தப் புதிருக்கு விடை கிடைத்தது எனக்கு. ஆபீஸ் காரின் டிரைவராக மல்லப்பன் என்னுடன் வரவில்லை. கதிர்வேல் என்ற புதிய டிரைவர் தான் வந்தான்.

முன்னெச்சரிக்கை இல்லாமல் மல்லப்பன் லீவு போட்டதற்கான காரணத்தை நான் கேட்காமலேயே அவன் கூறியபோது என் வியப்புக்கும் திகைப்புக்கும் அளவே இல்லை.

''மல்லப்பன் காட்டான் மாதிரி வளர்ந்திருந்தானே தவிர, கொண்ட பெண்டாட்டியை அடக்கி வைக்கத் துப்பில்லே சார் அவனுக்கு. பெத்த புள்ளையைக் கூட 'அம்போ'ன்னு விட்டுட்டு ஆசை நாயகனோட போயிட்டா அந்த மகராசி. மல்லப்பன் மனசு இடிஞ்சு போய் வீட்டிலேயே உட்கார்ந்திருக்கான்!''

சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு ஊர் திரும்பியதுமே முதல் வேலையாக மல்லப்பனுடைய வீட்டு விலாசத்தை விசாரித்துக்கொண்டு அங்கே சென்றேன்.

இரண்டு வயதுப் பிள்ளையை மடியில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு சாப்பாடு ஊட்டிக் கொண்டிருந்தான் மல்லப்பன். என்னைக் கண்டதும் ஒரு விரக்திச் சிரிப்புடன், ''வா, தம்பி சார். நீ வருவேன்னு தான் நெனைச்சேன்.'' என்றான்.

நான் மௌனமாக அவனெதிரே ஒரு ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டேன்.

மல்லப்பன் தான் பேச்சை ஆரம்பித்தான்.

''தம்பி சார், பெண்டாட்டியை அடக்கி வைக்கத் தெரியாதவன்னு எல்லாரும் என்னைக் கேலி செய்யறாங்க. இப்பவே நான் அவளைத் தேடிக்கிட்டுப் போயி அவளையும் அந்த அடுத்துக் கெடுத்த துரோகி நாகப்பனையும் கண்ட துண்டமாக வெட்டிப் போடணும்னுஎல்லோரும்எதிர்பார்க்கிறாங்க. அவ்வளவு ஆத்திரம் எனக்கும் வரத்தான் வருது. ஆனா நல்லம்மா மேலே நா வைச்சிருக்கிற ஆசை குறுக்கே நிக்குதே! என்னோட தவிப்பெல்லாம் என்ன தெரியுமா? அந்த நாகப்பனை நம்பி அவன் பின்னோட போயிருக்காளே, அவளை அவன் சொகுசா வச்சுக் காப்பாத்துவானா? நட்டாத்தில விட்டுட்டா அவ கதி என்ன ஆகும்! ஆனா ஒண்ணு மட்டும் சொல்லி வைக்கிறேன். அப்படி அந்த நாகப்பன் நல்லம்மாவுக்குத் துரோகம் செய்யத் துணிஞ்சான்னா தொலைஞ்சான்! அந்தத் துரோகியை நார் நாராக் கிழிச்சுப் போட்டாத்தான் என் மனசு ஆறும்!''

நான் சிரிக்கவில்லை. அவன் மனத்திலிருந்த வேதனையின் ஆழத்தைப் புரிந்து கொண்டு மௌனமாக இருந்தேன். அவனுக்கு ஆறுதல் சொல்லப் போன நான் கடைசிவரை ஒரு வார்த்தை கூடப் பேசாமலே திரும்பி வரும்படி ஆயிற்று!

ஒரு வாரத்துக்கெல்லாம் மல்லப்பன் மீண்டும் 'டியூட்டிக்கு' வர ஆரம்பித்துவிட்டான். மறு மாதம் நான் வெளியூர்ப் பயணத்தை மேற்கொண்டபோது அவன்தான் காரை ஓட்டிக் கொண்டு வந்தான்.

''ஏன் மல்லப்பா, உன் மகனைக் கவனிச்சுக்க வீட்டில யாரு இருக்காங்க?'' என்று கேட்டேன்.

''மாரியைத்தான் நல்லம்மா கிட்டவே அனுப்பிச்சுட்டேனே! 'புள்ளையைப் பிரிஞ்சு இருக்கிறது கஷ்டமா இருக்கு' அப்படின்னு நல்லம்மா தன் கைப்பட லெட்டர் எழுதி ஆள்கிட்டக் குடுத்தனுப்பி யிருந்தா. அதுக்கப்புறம் அந்தப் புள்ளையைத் தாய் கிட்டேயிருந்து பிரிச்சு வைக்க எனக்கு எப்படி மனசு வரும்? அந்த ஆள் கூடவே மகனை அனுப்பி வைச்சுட்டேன்'' என்று கூறினான் மல்லப்பன், வழக்கமான விரக்திச் சிரிப்புடன்.

இருபது வருடங்களுக்குப் பிறகு நாலைந்து மாதங்களுக்கு முன்புதான் நான் மல்லப்பனை மறுபடி சந்தித்தேன். வட நாட்டில் வெவ்வேறு இடங்களில் இருந்த எங்கள் நிறுவனத்தின் கிளைகளில் கடந்த இருபது வருஷங்களாகப் பணி புரிந்த பிறகு, நிறுவனத்தின் தலைமைப் பதவியை ஏற்றுத் திரும்பி வந்திருந்தேன்.

''தம்பி சார்'' அழைப்புத்தான் பழக்கமாயிருந்தது. ஆளைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. எலும்புக் கூடாக எக்கலெடுத்து என் எதிரே நின்றிருந்தான் மல்லப்பன்.

''மல்லி, உன் உடம்புக்கு என்ன?''

பதிலேதும் சொல்லாமல் கையை மட்டும் நீட்டினான் அவன்.

''ஒரு ரூபா வேணும் தம்பி சார்!''

மறு பேச்சில்லாமல் பர்சிலிருந்து ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவன் கையில் வைத்தேன்.

மறுகணம் மல்லப்பன் அங்கே நிற்கவில்லை. நன்றிகூடத் தெரிவிக்காமல் விரைந்து சென்று விட்டான்.

நான் காரில் ஏறப் போனபோது என் உதவியாளன் என்னை நோக்கி விரைந்து வந்தார்.

''மல்லப்பனுக்குப் பணம் கொடுத்தீங்களா சார் இப்பவே அவ்வளவையும் குடிச்சுத் தொலைச்சுடுவானே?''

---

## ரகசியம் அம்பலமாகிறது!

''ஒருவர் கூட நான் 40,000 ஓட்டுக்களைப் பெற்று ஜெயித்தேன் என்று கூறவில்லை. 40,000 ஓட்டுக்களை 'வாங்கி' ஜெயித்தேன் என்று தான் கூறுகிறார்கள். இந்த உண்மை போதாதா?''

-குன்றக்குடி அடிகளார் கூறக்கேட்டவர் வ. தேனப்பன்



''குடிச்சுக் குடிச்சுத்தான் இப்படி ஆயிட்டானு?''

''ஆமாம் சார். நீங்க இங்கே இருந்து போனப்புறம் நாலஞ்சு வருஷம் ஒழுங்காத் தான் இருந்தான். மனைவி மறைஞ்சப்புறம் தான் மாறிட்டான். அவன் குடிக்க ஆரம்பிச்சது அதுக்கப்புறம்தான்!''

''மனைவி இல்லையா இப்போ?''

''இல்லே. நாகப்பன் நடத்தி வந்த வியாபாரம் தொடிச்சுப் போச்சு. சாப்பாட்டுக்கே திண்டாட்டம். ஆனு மல்லப்பன் மனைவியைக் கைவிடல்லே. மாசா மாசம் தன்னுேட சம்பளத்தில பெரும் பகுதியை நல்லம்மாவுக்கே அனுப்பி வந்தான். அவனுேட அந்தப் பெருந்தன்மையே நல்லம்மாவோட மனசைச் சுட்டெரிச்சிருக்கணும். மல்லப்பனுக்குச் செய்த துரோகத்துக்காகத் தன்னைத் தானே நொந்து நொந்து மருகியே அவ மடிஞ்சு போயிட்டா!''

சரியாக ஒரு வாரம் கழித்து மல்லப்பன் மறுபடியும் எதிர்ப்பட்டான். முன்போலவே கையை நீட்டி, ''தம்பி சார், ஒரு ரூபா!'' என்றுன்.

''கையிலே பணம் இல்லியே மல்லி!''

மல்லப்பன் மறு வார்த்தை பேசாமல் என்னையே முறைத்துப் பார்த்துக் கொண்டு நின்றுன்.

''தம்பி சார், பணம் இல்லேன்னு ஏன் சொல்லறே? குடுக்க இஷ்டமில்லேன்னு சொல்லு!''

''இஷ்டமில்லேதான் மல்லி. நீ பணம் கேக்குறது எதுக்குன்னு எனக்குத் தெரியும்.''

''நீ நெனைக்கிறது தப்பு. நான் அதுக்காகப் பணம் கேக்கலே. என் நல்லம்மா வெள்ளிக் கிழமைதான் இந்த உலகத்தை விட்டுப் போனு. வெள்ளிக் கிழமை தோறும் எங்க குலதெய்வமான அங்காளம்மனுக்கு விளக்கேத்தி வைப்பேன் நல்லம்மாவோட ஆத்மா சாந்தியடையப் பிரார்த்தனை செய்வேன். அப்பத்தான் எனக்கு நிம்மதி.''

''போன வெள்ளிக் கிழமையும் இதுக்காகத்தான் பணம் கேட்டயா?''

'ஆமாம். நான் கேட்டது ஒரு ரூபாதான். நீ ஏன் அஞ்சு ரூபா கொடுத்தே? மிச்சம் நாலு ரூபாயைக் கையிலே வச்சுக்கிட்டுச் சும்மா இருக்க முடியுமா என்னுலே? மனம் கொண்ட மட்டும் குடிச்சேன், உன் பேரைச் சொல்லி!''

---

''அந்த ஓட்டல் சப்ளையருக்க கிட்ட ஏதா வது தகராறு செஞ்சா துப்பாக்கியைக் காண்பிக்கறுங்க''

''ஏன், அப்படி?''

''அதுதான் மிலிடரி ஓட்டலாச்சே''

— உதுமா



மறு பேச்சில்லாமல் நான் ஒரு ரூபாயை எடுத்து அவன் கையில் கொடுத்தேன்.

மாலையில் அங்காளம்மன் கோயில் பக்கமாகச் சென்று சற்றுத் தூரத்தில் காரை நிறுத்திவிட்டு மறைந்து நின்று கவனித்தேன். சந்நிதியில் ஏற்றி வைக்க எண்ணெய்க் கிழிகள் கோயில் வாசலில் விற்பனையாகிக் கொண்டிருந்தன. விளக்கு வைக்கும் நேரத்துக்கு மல்லப்பன் அங்கே வந்து விட்டான். ஒரு ரூபாய்க்கு எண்ணெய்க் கிழிகள் வாங்கிக் கொண்டு உள்ளே சென்றுன். சந்நிதியில் அவற்றை ஏற்றி வைத்துவிட்டுக் கைகளைக் கூப்பித் தலையைத் தாழ்த்தி நின்று மௌனமாகப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான். பின்பு கண்களைத் துடைத்துக் கொண்டவாறு வெளியே வந்து, கனவில் நடப்பவன் போல் நடந்து அங்கிருந்து சென்று விட்டான்.

என் கண்களிலும் நீர் நிரம்பியது. அவனைச் சந்தேகித்ததை எண்ணி மனம் வெதும்பியவாறு என் மறைவிடத்திலிருந்து காரை நோக்கி நடந்தேன்.

மல்லப்பனின் இறுதி யாத்திரைக்குப் புஷ்பப் பல்லக்குத் தயாராகியிருந்தது. ஒன்றுக்கும் குறை வைக்காமல் தான் எல்லாவற்றுக்கும் ஏற்பாடு செய்திருந்தான் மாரி. தாரை தம்பட்டைகள் முழங்க ஆரம்பித்தன. சடலத்தைப் பல்லக்கில் தூக்கிவைத்துத் அலுங்காமல் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தனர்.

அப்போது ரிக்ஷா ஒன்று அங்கே வந்து நின்றது. கையில் மலர் மாலையுடன் ஓர் ஆள் தட்டித் தடவியவாறு அந்த ரிக்ஷாவிலிருந்து இறங்கினுன். மாரி அவனருகே விரைந்து சென்று அவனைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டான். மாரியின் உதவியுடன் நடந்து சென்ற அந்த ஆள், தன் கையில் இருந்த மலர் மாலையை மாரி காட்டியபடி மல்லப்பனின் சடலத்தின் மீது பக்தியுடன் வைத்துவிட்டு, சட்டென்று குனிந்து சடலத்தின் கால்களோடு தன் முகத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டு சில நிமிஷங்கள் அதே நிலையில் இருந்தான். அவன் விம்மிய விம்மல் அவன் உடலைக் குலுக்கிப் போட்டுக் கொண்டிருந்தது.

மீண்டும் மாரி அவனை நடத்திச் சென்று ரிக்ஷாவில் ஏற்றிவிட்டுத் திரும்பியதும் என் உதவியாளர் என் அருகே வந்தார்.

''அது யாரு தெரியுமில்லே?''

''யாரு?''

''நாகப்பன்!''

''நாகப்பனு? கண் பார்வை இல்லையா அவனுக்கு?''

''கண் பார்வை போய் நாலஞ்சு வருஷமாச்சு சார். ஒரு நல்ல உள்ளத்துக்கு அவ்வளவு துரோகம் செய்தானில்லையா? அதுக்குப் பலனை அனுபவிக்கத்தானே ஆகணும்?''

என் நெஞ்சிலிருந்து ஒரு நெடு மூச்சு எழுந்தது. அங்காளம்மன் சந்நிதியில் மல்லப்பன் ஏற்றி வைத்த தீபங்கள் என்றும் அணையாத தீபங்களாக என் மன விளிம்பில் ஒளிர்ந்தன!

# GH

**பி.வி.ஆர்** எழுதும்
தொடர்கதை
**கல்கி** ஆகஸ்டு 3உ
ஆண்டுமலரில்
ஆரம்பம்





# சஞ்சய்:

# 2. இளமையில் விஷமம்!

**கி. கஸ்தூரிரங்கன்**

டிசம்பர் 14, 1946. காலை 9.27.

டில்லி வெலிங்டன் ஆஸ்பத்திரியில் சஞ்சயின் ஜனனம் சுலபமாக இருக்கவில்லை. மூத்தவன் ராஜீவ் சுகப் பிரசவம் ஆகியதற்கு மாறாக சஞ்சயின் பிறப்பு தாயின் உயிருக்கே ஆபத்து என்ற நிலைமை வரை போய்விட்டது.

பிறக்கும்போது கூட அவசரம். எட்டு மாதம்கூட நிரம்பவில்லை. நள்ளிரவில் இந்திராவுக்குத் திடீரென்று இடுப்பு வலி எடுத்து, தொடர்ந்திருந்தது. டாக்டரோ இன்னும் ஒரு மாதம் ஆகும் என்று சொல்லியிருந்தார். உடன் இருந்த அத்தை கிருஷ்ணா ஹத்தி சிங்குக்கு என்ன செய்வது என்று புரியவில்லை.

நேரு அப்போதுதான் சில மாதங்களாக இடைக்கால சர்க்காரின் தலைமைப் பொறுப்பேற்றிருந்தார். இந்தியா பாகிஸ்தான் துண்டாடும் ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. எங்கே பார்த்தாலும் கலவரம். ஹிந்து முஸ்லிம் ரகளை ஆரம்பமாகி இருந்தது.

முஸ்லிம் அகதிகள் நேரு குடியிருந்த யார்க் ரோடு பங்களாவுக்கே தஞ்சம் கேட்டு வந்து விட்டனர். காம்பவுண்டுக்குள் டெண்ட் கொட்டகைக்குள் அவர்கள் தங்கியிருந்தனர். நேரு வேலை அசதியில் தூங்கிக் கொண்டிருந்தார்.

இரவு 2 மணியாகிவிட்டது. கிருஷ்ணா இந்திராவைக் கட்டாயம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். இன்னொரு அறையில் இந்திராவின் கணவர் பிரோஸ் காந்தி தூங்கிக்கொண்டிருந்தார். அவர் வீட்டில் இருந்ததே அதிர்ஷ்டம். லக்னோவில்தான் அவருக்குக் குடியிருப்பு. அங்கே நேரு நடத்திவந்த 'நேஷனல் ஹெரால்டு' ஆசிரியப் பொறுப்பேற்றுச் சில மாதங்களே ஆகியிருந்தன. மனைவியையும் குழந்தை ராஜீவையும் பார்க்க அவ்வப்போது டில்லி வந்து போய்க் கொண்டிருந்தார்.

கிருஷ்ணா பிரோஸ் காந்தியை எழுப்பி நிலைமையைச் சொன்னார். உடனடியாக டாக்ஸி ஒன்றைக் கூப்பிட்டு இந்திராவை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச்சென்றனர். தூங்கிக்கொண்டிருந்த நேருவை எழுப்பவில்லை.

இரவு முழுவதும் இந்திரா வலியினால் துடித்தார். ரத்தப் போக்கு ஆரம்பித்து நிற்கவேயில்லை. பிரோஸ் காந்தி குளிரில் வராந்தாவில் நடைபயின்று கால் வலித்து விட்டது. 'இந்திரா பிழைத்தால் போதும்; குழந்தை எப்படியாவது போகட்டும்' என்று கூட அவர் சிந்தனை ஓடியது.

ஒன்பதரை மணி அளவில் டாக்டர் வெளியே வந்து ஆண் குழந்தை என்றார். பிரோஸ் உள்ளே சென்றபோது இந்திரா மயக்கத்தில் கிடந்தார். ரத்தம் வடிந்து முகம் வெளிறிப்போயிருந்தது. 'இந்திராவுக்கு ஆபத்து இல்லையே?' என்று டாக்டரைக் கேட்டார். 'ஒன்றும் சொல்வதற்கில்லை; பார்க்க வேண்டும்' என்றார் டாக்டர்.

1942ல் பிரோஸ் காந்தி இந்திராவைத் திருமணம் செய்துகொண்ட கையோடு இரு

வரும் சுதந்திரப் போராட்டக் கைதிகளாக ஜெயிலுக்குப் போய்விட்டனர்.

ஒன்பது மாதங்களுக்குப்பிறகு இந்திராவை விடுதலை செய்தார்கள். அடுத்துச் சில வாரங்களுக்குப் பின்தான் பிரோஸ் வெளியே வந்தார். அதன் பின் அலகாபாத்தில் நடத்திய மூன்றுவருடங்கள்தாம் இருவரும் தொடர்ந்து ஒன்றாக இருந்த இனிய நாட்கள்.

1946ல் நேரு டில்லிக்கு இடைக்கால சர்க்கார் பொறுப்பேற்றுச் செல்ல இந்திராவும் ராஜீவுடன் அவருடன் டில்லிக்குப் போனார். பிரோஸ் நேருவுக்குப் பதில் லக்னோவில் பத்திரிகையை நடத்த வேண்டி வந்தது.

1952ல், பிரோஸ் காந்தி பார்லிமெண்ட் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படும் வரை அவர் லக்னோவிலும் இந்திரா டில்லியிலுமே வாழவேண்டியதாயிற்று. இந்த ஆறாண்டுகளில் கணவன் மனைவி உறவில் விரிசல் ஏற்பட்டு இருவரும் தனித் தனி வாழ்க்கை அமைத்துக் கொள்ளும் நிலைமை ஏற்பட்டு விட்டது.

லக்னோவில் உல்லாச சுகபுருஷரான பிரோஸ் காந்திக்குப் புதிய தொடர்புகள் ஏற்பட்டு விட்டன. இந்திராவின் காதில் விழுந்த செய்திகள் கசப்பாக இருந்தன. இருப்பினும் பிரோஸ் காந்தி பிள்ளைகள் இருவர் மேல் வைத்திருந்த பாசத்தினால் அடிக்கடி டில்லி வந்து போய்க் கொண்டிருந்தார்.

இந்தப் பிளவு 1952ல் பிரோஸ் பாராளிமெண்ட் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு டில்லிக்கு நிரந்தரமாக வந்த பின் அதிகரித்து விட்டது. அப்போது நேரு தீன்மூர்த்தி மாளிகைக்குக் குடிபோயிருந்தார். இந்திரா மாளிகை நிர்வாகப் பொறுப்பைக் கவனித்துக் கொண்டு நேருவின் அரசியல் தொடர்பான சகல காரியங்களுக்கும் துணையாக நின்றார். இந்திராவை விட நெருங்கிய நபர் வேறு யாரும் இல்லை.

பிரோஸ் காந்தி குழந்தைகளோடு விளையாடுவதில் மகிழ்ச்சி கண்டார். அப்பாவுடன் இருவரும் ஒட்டிக் கொண்டனர். சஞ்சய்க்கு அப்பாவோ தாத்தாவோ கிடைத்தால் விடமாட்டான். மண்டி போடச் சொல்லி முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டு 'ரயில் விளையாட்டு' விளையாடுவான். அம்மாவும் அப்பாவும் அபரிமிதமாக அன்பைத் தனித் தனியே வழங்கியதோடு தாத்தாவின் செல்லம் வேறு!

ராஜீவ் ஆரம்பத்திலேயே சாது என்று பெயரெடுத்து விட்டான். சஞ்சயோ நேர் மாறாகத் துறுதுறுவென்று அலைந்துகொண்டிருந்தான். பிடிவாதம் அதிகம். விரும்பியது உடனே கிடைக்க வேண்டும் என்று அடம் பிடிப்பது சுபாவமாயிற்று. ஒரு முறை வேறு ஒரு வீட்டில் ஒரு சிறுவன் பொம்மை மின்சார ரயில் வைத்திருந்ததைப் பார்த்துவிட்டான். வீட்டுக்கு வந்ததும் தனக்கும் உடனே' ரயில் பொம்மை வேண்டும் என்று' அடம் பிடித்து அழுதான். இரவுஏழுமணிக்கு மேலாகி விட்டதால் கடைகள் எல்லாம் மூடப்பட்டு விட்டன. அப்பா அம்மா மற்றவர்கள் எத்தனையோ சொல்லியும் அழுவது நிற்கவில்லை. எட்டு மணியளவில் நேரு வீட்டுக்கு வந்த போது என்ன நடந்து விட்டது என்று கேட்டார். விஷயத்தை அறிந்து கொண்டதும் எங்கேயெல்லாமோ டெலிபோன் செய்து முதலில் ஒரு கடையைத் திறக்கச் செய்து பொம்மை மின்சார ரயில் தருவித்துத் தந்த பின்னர்தான் சஞ்சயின் அழுகை நின்றது.

நான்கு வயதுக்குள்ளே சஞ்சய்க்குத் தீவிரமான விருப்பு வெறுப்புக்கள் வந்துவிட்டன. 'டென்னிஸ் தி மெனேஸ்' சித்திரங்களில் வரும் பையன் போல விஷமங்கள் செய்துகொண்டு வெடுக்கென்று பேசிக் கொண்டிருப்பான்.

ஒரு முறை இந்திராவின் சிநேகிதி ஒருத்தி பேசிக் கொண்டிருந்தபோது ''இத்தனை



பொறுப்புக்கள் இருக்கிறதே. குழந்தைகளைக் கவனிக்க உனக்கு நேரம் ஏது?'' என்று கிண்டலாகக் கேட்டார்.

உடனிருந்த சஞ்சய், ''நீங்கள் உங்கள் குழந்தைகளைக் கவனிப்பதை விட என் அம்மா எங்களை அதிகமாகவே கவனித்துக் கொள்கிறார்'' என்றான் வெடுக்கென்று.

நேருவின் வீட்டில் அயல் நாட்டுப் பிரஜைகள் வந்து தங்குவது வழக்கம். ஒருமுறை முதன் முதலாக விண்வெளிக் கலத்தில் பறந்த ரஷ்ய விண்வெளி வீரர் யூரி காகரின் வந்திருந்தார். பலபேர் நடுவில் தம் விண்வெளி அனுபவத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார். சஞ்சய் காந்தி பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தான். உடனிருந்தவர் ஒருவர், ''நீங்கள் விண்வெளிக் கலத்தில் பறக்க முன்வந்ததே தைரியமான செயல்'' என்று பாராட்டினார். சஞ்சய் காந்தி சும்மா இருக்கவில்லை. ''அவர் மாட்டேன் என்றால் கட்டுக் கொண்டிருப்பார்களே!'' என்று சொல்லி, காகரினையும், மற்றவர்களையும் அதிர்ச்சிக்குள்ளாக்கினான்.

பின்னால், ஏன் அப்படித் துடுக்காகச் சொன்னாய் என்று கேட்டதற்கு ''அவர் என்ன பெரிய திறமைசாலி? விண்வெளிக் கலத்தில் அவரும் ஒரு கருவிதானே'' என்று அலட்சியமாகச் சொன்னான்.

சஞ்சய் காந்திக்குச் செல்லப் பிராணிகளை வளர்ப்பது பிடிக்கும். பறவைகளை வலை போட்டுப் பிடித்துக் கூண்டில் அடைப்பது போக, அணில், முயல் என்று வகை வகையாகச் சேர்த்துக் கொண்டிருந்தான். தாத்தா நேருவுக்கும் பிராணிகள் என்றால் பிரியம். நாய்கள், பாண்டாக்கள், புலிக் குட்டிகள் என்று வீட்டில் ஒரு மிருகக் காட்சி சாலையே சேர்ந்துவிட்டது. எல்லாவற்றிலும் செல்லப் பிராணியாக சஞ்சய் கருதியது ஒரு முதலைக் குட்டி. ஆனால் அது எல்லாரையும் எல்லாவற்றையும் கடித்து வைத்தது.

''என்னைத் தவிர எல்லாரையும் கடித்து விடும். ஒரு நாள் அம்மாவையே கடித்து விட்டது. அப்புறம் லக்னோ ஜூவுக்கு அனுப்பி வைத்தார்'' என்று பின்னர் சஞ்சய் குறிப்பிட்டார்.

மிகவும் சுவாரசியமான, சந்தோஷமான சூழ்நிலையில் கசப்பாக இருந்த ஒரே சம்பவம் அம்மாவும் அப்பாவும் ஓயாமல் சண்டை போட்டுக் கொண்டதுதான்.

பிரோஸ் காந்தி தீன்மூர்த்தி மாளிகையில் ஒரு விருந்தாளி மாதிரியே இருந்தார். நண்பர்களைக் கூட்டிக் கொண்டு கேளிக்கைகளில் ஈடுபட்டார். இரவுகளில் வெளியே தங்கி விட்டு நேரம் கழித்து வந்தார். பெண்கள் தொடர்பும் ஏற்பட்டது.

இதனால் இந்திராவுக்கும் அவருக்கும் இடையே நாலு பேர் எதிரிலேயே சண்டைகள் நிகழ்ந்தன. சில நாட்களில் பிரோஸ் காந்தி தமக்கு ஒதுக்கப்பட்ட சிறிய குவார்ட்டர்சுக்குக் குடியேறினார். இந்திரா தன் தந்தையை விட்டு அவருடன் செல்ல மறுத்து விட்டார்.

அதன் பின் காலை உணவுக்கு மட்டும் பிரோஸ் காந்தி தீன் மூர்த்தி பவனுக்கு வருவார்.

சில சமயம் குழந்தைகள் இருவரையும் தன் இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்று தாம் வளர்த்து வரும் ரோஜா மற்றும் பல மலர்ச் செடிகளைக் காட்டி மகிழ்வார்.

சஞ்சய் நாலு வயதில் டில்லியில் நர்ஸரிப் பள்ளியில் சேர்க்கப்பட்டான். ஜெர்மன் பெண்மணி நடத்தி வந்த பள்ளி. அப்போதே சஞ்சய்க்குப் பள்ளிப் படிப்புப் பிடிக்கவில்லை. யாரோடும் பேசுவதும் இல்லை, பாடங்களில் கவனம் செலுத்துவதுமில்லை. பிராணிகள், பறவைகள் அவனுடைய தோழர்களாக இருந்தன. சிறு வயதிலேயே சுத்தி, ஆணி, மரைகள் இவைகளை வைத்துக் கொண்டு, ஓட்டை உடைசல்களைச் செப்பனிடுவதில் ஈடுபாடு உண்டு.

விமலா சித்தி என்று நேரு வீட்டைக் கவனித்துக்கொள்ளப் பருமனான ஒரு பெண்மணி இருந்தாள். ஒரு முறை பெரிய ஸ்வெட்டர் ஒன்றைப் பின்னி முடித்த பின் அங்கேயே தூங்கிப் போனாள். எழுந்து பார்க்கும் போது ஸ்வெட்டரைக் காணோம். இந்திராவிடம் புகார் செய்ய அவர் சஞ்சயைக் கூப்பிட்டு மிரட்டினார். சஞ்சய் விஷமத்தை ஒப்புக்கொண்டான். ஸ்வெட்டர் நூலைப் பிரித்துத் தோட்டத்தில் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடி வரை கட்டி வைத்தான். 'குண்டு மம்மியை நடக்க வைக்க வேண்டும் என்று செய்தேன்'' என்றான் சஞ்சய்.

ஆறு வயதானபோது சஞ்சய் டேராடூனின் பள்ளியில் சேர்க்க முடிவாயிற்று. இந்திராவுக்குக் கவலை. ராஜீவ் டூன் பள்ளியில் அம்மாவை விட்டு இருக்கப் பழகிக் கொண்டு விட்டான். சஞ்சய் இதுவரை அம்மாவைப் பிரிந்ததில்லை. சில நாட்களுக்கு இந்திரா டேராடூனிலேயே இருந்துகொண்டு சஞ்சயைப் பள்ளியில் போய்ப் பார்த்து வந்தார். சஞ்சய் எதிர்பார்த்தபடியே பிரிந்து இருப்பதை விரும்பவில்லை. பாடங்களில் மனம் செல்லாது தினமும் அம்மா வரும் நேரத்தையே பார்த்துக் கொண்டிருப்பான்.

சஞ்சய்க்கு உடம்பு வேறு சரியாக இல்லை. அடிக்கடி ஜுரம் வந்து கொண்டிருந்தது. அவனுக்கென்று தனியாக உணவு தயாரிக்க வேண்டி வந்தது.

டூன் பள்ளித் தலைமை ஆசிரியர் இந்திரா தினம் வருவது சஞ்சயின் வீட்டு நினைவை அதிகரிக்கச் செய்கிறது என்று சொல்லி இந்திரா தினமும் வரவேண்டாம் என்று சொல்லித் தடுத்து விட்டார். சஞ்சய் ஏக்கத்தில் தவித்தான். படிப்பிலோ விளையாட்டிலோ கவனம் செலுத்தவே இல்லை. விடுமுறை நாட்களில் வீட்டுக்குப் போகும் நினைப்பிலேயே பள்ளி நாட்களைக் கழித்து வந்தான்.

பத்து வயதாகும்வரை நிலைமை அப்படியே இருந்து வந்தது. பிரோஸ் காந்தியும் இந்திராவும் அடிக்கடி வந்து பார்த்தனர். ஆனால் ஒருபோதும் சேர்ந்து வந்ததில்லை. சிலநாள் காலையில் இந்திரா வந்து பார்த்துவிட்டுப் போயிருப்பார், மாலையில் அப்பா வந்து நிற்பார். அம்மா அப்பாவிடையே உறவு முறிந்து விட்டது என்று சஞ்சய் உணர ஆரம்பித்தான். 1960ம் ஆண்டு அவன் 14 வயது முடிவதற்குள் பிரோஸ் காந்தி மாரடைப்பினால் இறந்து போனார். (தொடரும்)



# உறவின் கைதிகள்

## ஜெயலலிதா

### 5

To live is like love, all reason is against it, and all healthy instinct for it.

Samuel Butler - 1835-1902

இடைவேளைக்கு முன்பே ''சாகுந்தலம்'' நாடகம் முடிவு பெற்று விட்டது. அன்றைய மாலை நிகழ்ச்சிகளின் பிற் பகுதியில் வேறு சில மாணவியர் வழங்கும் பல்கலை விருந்து இடம் பெறும் என்பதை ராஜீவுக்கு ப்ரின்ஸி பால் தெரியப் படுத்தியவுடன், எப்படியாவது அங்கிருந்து கழற்றிக் கொண்டு போய் விட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றிற்று.

அவன் வந்திருந்ததே உஷாவுக்காகத் தான். அன்று மாலை மீண்டும் உஷாவைக் காணும் வாய்ப்பு கிட்டப் போவதில்லை என்பதை உணர்ந்ததும், இனியும் தொடர்ந்து அங்கே உட்காருவதில் அர்த்தமில்லை என்று ராஜீவ் கருதினான்.

''வெரி ஸாரி மேடம், நான் இப்பவே புறப்படணும். ஒரு கல்யாண ரிஸப்ஷனுக்குப் போக வேண்டியிருக்கு'' என்று மிஸ் மைத்ரேயியிடம் புளுகிவிட்டு விடைபெற்றுக் கொண்டான்.

போகும் முன், சுரேஷிடம் பேனாவும் காகிதமும் வேண்டும் எனக் கேட்டான். தனது பாக்கெட்டிலிருந்த சிறிய டைரியிலிருந்து ஒரு பக்கத்தை கிழித்து எடுத்து, அதையும் பேனாவையும் ராஜீவிடம் கொடுத்தான் சுரேஷ்.

அவசரமாக அதில் நான்கு வரிகளைக் கிறுக்கி விட்டு, காகிதத்தை மடித்து சுரேஷிடம் கொடுத்து, அவன் காதோடு ராஜீவ் ரகசியமாக ஏதோ சொன்னான்.

அவன் சொன்னது சுரேஷுக்கு மிகுந்த வியப்பை உண்டாக்குவதாக இருந்தது. சுரேஷ் ஒரு கணம் தயங்கினான். ராஜீவை ஒரு பார்வை பார்த்தான். அந்தப் பார்வையில் அடங்கியிருந்த பொருள் ''நீங்கள் செய்வது சரிதானா, இது விவேகமுள்ளவர் செய்யும் காரியமா'' என்னும் கேள்வி. அவர்களைச் சுற்றி நிறைய பேர்கள் இருந்ததால், சுரேஷ் உரக்க எதுவும் கூறவில்லை.

சுரேஷுடைய பயத்தை அகற்றி நம்பிக்கை யூட்டும் வகையில் ராஜீவ் தலையை அசைத்தான். அந்த ஒரு அசைவினுள் அடங்கியிருந்த அர்த்தம் - ''பரவாயில்லை. என்ன செய்கிறேன் என்பதை நன்றாகப் புரிந்து கொண்டுதான் செய்கிறேன்'' என்ற பதில்.

சுரேஷ் லேசாக தனது தோள்களை உயர்த்தினான். அந்தச் செய்கையின் உள்ளர்த்தம் ''சரி, இதன் விளைவு என்னவானாலும் அதற்கு நீங்களே பொறுப்பாளி! நீங்கள் இடும் கட்டளையை நான் நிறைவேற்றுகிறேன், அவ்வளவுதான்'' என்பதே.

ராஜீவும் சுரேஷும் வெகு நாட்களாக ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகி விட்ட காரணத்தால், வாய் திறந்து ஒரு வார்த்தை

---

ஒரு வருடத்தில் இரண்டு அல்லது மூன்று தடவைக்கு மேல் யாருமே சிந்திப்பது கிடையாது. நான் வாரத்துக்கு ஓரிரு முறை சிந்திக்கிறேன். உலகம் என்னைச் சிந்தனையாளன் என்று பாராட்டுகிறது.

-பெர்னார்ட் ஷா

-பிரியா பானு

---

கூட பேசாத போதிலும், வெறும் பார்வையாலேயே, ஒருவன் மனத்தில் உள்ளதை மற்றவன் உடனே கிரகித்துக் கொள்ளும் அளவிற்கு இருவருக்கும் இடையே ஒரு அபூர்வ மன ஒற்றுமை வளர்ந்திருந்தது.

ராஜீவ் தனக்கிட்ட கட்டளையை நிறைவேற்ற சுரேஷ் சென்று விட்டான்.

ப்ரின்ஸிபாலும் மற்ற முக்கியஸ்தர்களும் வாசல் வரை வந்து வழியனுப்ப, ராஜீவ் தனது காரில் அமர்ந்து அங்கிருந்து புறப்பட்டுப்போய் விட்டான்.

மேடைக்குப் பின்னால் க்ரீன் ரூமில் உஷா தனது உடைகளை மாற்றிக் கொண்டிருந்தாள். அச்சமயம் அவள் ட்ரெஸ்ஸிங் ரூமில் தனியாக இருந்தாள். மேடையில் நடைபெற்றுக் கொண்டிருந்த மற்ற நிகழ்ச்சிகளைக் காண, ''சாகுந்தலம்'' நாடகத்தில் அவளுடன் பங்கு பெற்ற மற்ற பெண்கள் சென்று விட்டிருந்தனர். அதில் உஷாவுக்கு விருப்பம் இல்லாததால் பின்தங்கி விட்டாள்.

உஷா தனது கூந்தலிலிருந்த மலர்களை எடுத்து மேஜையின் மீது வைத்துக் கொண்டிருந்த போது, யாரோ க்ரீன் ரூம் கதவின் மீது தட்டும் சப்தம் அவள் காதில் ஒலித்தது.

''கம் இன்'' என்று அவள் குரல் கொடுத்தாள். சுரேஷ் உள்ளே நுழைந்தான். அவனைக் கண்டதும், உஷாவின் கண்கள் ஆச்சரியத்தில் பெரிதாக விரிந்தன. அவனை உடனே அடையாளம் கண்டு கொண்டாள். சுரேஷ் உள்ளே வந்து கதவை சாத்தியதும், உஷாவுக்கு ஒன்றும் புரியவில்லை.

ராஜீவ் கொடுத்திருந்த மடித்த காகிதத்தை சுரேஷ் உஷாவிடம் நீட்டினான். ''என் முதலாளி இதை உங்க கிட்ட கொடுக்கச் சொன்னார்.''

ஆச்சரியத்தால் உஷாவால் பேச முடியவில்லை. மௌனமாக அந்தச் சீட்டைப் பெற்றுக் கொண்டாள்.

''தனியா இருக்கும் போது இதைப் படியுங்கள்'' என்று கூறிவிட்டு, வந்த வேகத்திலேயே சுரேஷ் வெளியேறி விட்டான்.

ஏதோ பிரமையில் இருப்பவள் போல், சிறிது நேரம் அவன் போன பிறகு, மூடிய கதவைப் பார்த்தபடியே உஷா நின்றாள். எல்லாம் ஒரு நொடியில் நடந்து விட்டது. சுரேஷ் வந்ததும் தெரியவில்லை போனதும் தெரியவில்லை.

உண்மையாக அப்படி நடந்ததா, இல்லை சுரேஷ் வந்ததை கற்பனை செய்தாளா? நிதானமாகக் கண்களைத் தாழ்த்தி, கையில் இருந்த சீட்டைப் பார்த்தாள். அதைப் பிரித்தாள், படித்தாள்.

அழுத்தத்தோடு அழகாக அமைந்திருந்த ஒரு ஆணுடைய கையெழுத்தில் நான்கே வரிகள் எழுதப்பட்டிருந்தன.

''உன்னோடு தனியாகப்பேச விரும்புகிறேன். உன்னை எப்படி எங்கே அணுகுவதென்று தெரியவில்லை. என்னுடைய பர்ஸனல் அன்லிஸ்டட் (Unlisted) நம்பர் 76542. இது டைரக்ட் லைன்.''

அவ்வளவே தான். கடிதத்தின் கீழ் எந்த கையொப்பமும் இல்லை. என்றாலும், அதை ராஜீவ்தான் எழுதி இருக்க வேண்டும் என்பதை உஷா புரிந்து கொண்டாள்.

குழப்பம், அதிசயம், ஆனந்தம், அச்சம், பரவசம் - எல்லாமும் ஒன்றோடு ஒன்று போட்டியிட்டு அவள் மனத்தில் போராட, மீண்டும், மீண்டும் அந்த மிகச் சுருக்கமான மடலைப் படித்தாள்.

ராஜீவ்! ராஜீவ் அவளோடு தனியாகப் பேச விரும்புகின்றாரா! அதற்காகத் தன்னுடைய பிரைவேட் அன்லிஸ்டட் டெலிபோன் நம்பரை அவளுக்குத் தந்திருக்கின்றாரா! ஏன்? எதற்காக?

இது கூடவா புரியவில்லை!

''வேறு எதற்காக இருக்க முடியும்? அப்படியானால், அவர் என்னை விரும்புகின்றாரா? இல்லை! இருக்க முடியாது. அவரைப் போன்ற ஒரு பெரிய மனிதர், என்



னைப் போன்ற ஒரு சாதாரணப் பெண்ணை நேசிக்க முடியுமா? அப்படி என்னில் விசேஷ மாக என்ன இருக்கிறது''

திரும்பித் தன் உருவத்தை கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். கண்கள் பனித்திட, கன்னங்கள் சிவந்திட, உதடுகள் துடித்திட, புதியதோர் உற்சாகம் உடல் முழுவதையும் குலுங்கச் செய்திட - கண்ணாடியில் அவள் தோற்றம் புதிய மெருகுடன் மின்னுவதைக் கண்டு தானே வியந்தாள், பூரித்துப்போனாள்.

''ஏன் அவர் என்னை நேசிக்கக் கூடாது? என்னில் என்ன இல்லை?''



ஆம். தான் ஒரு பேரழகி என்பதைத் தானே உணர்ந்து அகமகிழ்ந்தாள். உஷாவின் மனத்தில் எந்தப் போலித்தனத்திற்கும் இடமில்லை. மிகவும் தெளிவான நேர்மையான மனோபாவம் அவளுடையது. தான் அழகாக இருப்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அதை நேரிடையாக ஒப்புக் கொள்வதில் அவள் எந்தத் தவறையும் காணவில்லை. யாராவது அவள் அழகைப் புகழ்ந்தால், அவர்களுடைய பாராட்டுதலை நளினமாக ஏற்றுக் கொண்டு நன்றி கூறுவாளே தவிர, போலி தாழ்வுணர்வோடு, "சே, சே! அப்படியெல்லாம் சொல்லாதீங்க. நான் அப்படி ஒண்ணும் பெரிய அழகியில்லே" என்றெல்லாம் பொய் நாடகம் ஆடமாட்டாள்.

உஷா நேர்மையானவள், இனிமையானவள். புத்திசாலி - அதே சமயத்தில் வயதில் மிகவும் இளையவள். அவளுக்கு அப்போது தான் 18 வயது நிரம்பியிருந்தது. அன்பால் அரவணைக்கப்பட்டு, முழுமையான பாதுகாப்பில் செல்வமாக வளர்ந்தவள் ஆதலால், சிறு பிள்ளைத்தனம் நிறைந்தவளாக, வெளி உலகத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாதவளாக இருந்தாள். உஷாவின் மென்மையான உள்ளம், வாழ்க்கையின் ரம்மியமான பக்கத்தை மட்டுமே இதுவரை அறிந்திருந்தது. வாழ்க்கையின் கரடுமுரடான பக்கத்தைப் பார்க்க அவளுடைய குறைந்த அனுபவத்தில் இதுவரை சந்தர்ப்பமே இருக்கவில்லை.

மறுபடியும் அந்தக் கடிதத்தைப் படித்தாள். அவள் மனக் கோட்டையின் தலைவன்; அவள் கனவுகளின் மன்னன்; வெகு தூரத்திலிருந்து இதுவரை அவள் பூஜித்து வந்த அடைய முடியாத தெய்வம் என்று அவளால் கருதப்பட்டவர் - அவள் சற்றும் எதிர்பாராத விதத்தில் திடீரென்று இத்தனை அருகில் வந்து விட்டாரா! வெறும் பகற்கனவு என நினைத்து ஏங்கியதெல்லாம் நனவாகும் வாய்ப்பு அவள் கைக்கு மட்டும் எட்டும் அளவில் இத்தனை அண்மையில் வந்து விட்டதா! ஆயிரம் ஆயிரம் பெண்கள் அவரை நினைத்து நினைத்து ஏங்கும் பொழுது, தனக்கு ஏற்றவள் என்று அவர் அவளைத் தேர்ந்தெடுத்துக் கௌரவித்திருக்கிறாரா! உஷாவின் உள்ளம் பரவசத்தில் பொங்கிப் பெருமிதத்தில் திளைத்தது.

சடாரென்று க்ரீன் ரூம் கதவு திறக்கப்பட்டது. கூட்டமாகப் பல பெண்கள் உள்ளே வந்து விட்டனர்.

சட்டென்று விலை மதிப்பிட முடியாத பொக்கிஷமான அந்தக் காகிதத்தை மடித்து, உஷா அதனை தனது ரவிக்கைக்குள் ஒளித்து, நெஞ்சோடு இணைத்துக் கொண்டாள்....

(தொடரும்)



# நான் தான் மிஷா!

ஹல்லோ! என் பெயர்? மிஷா! நான் ஒரு கரடிக்குட்டி. சாதாரணக் கரடியல்ல. ஒலிம்பிக் கரடி! என்னுடைய பெல்டைப் பாருங்கள். ஒலிம்பிக் சின்னம் இருக்கிறதல்லவா?

1980 ஒலிம்பிக்குக்கு நான் தான் சின்னம். நான் உற்சாகம் மிக்கவன். எல்லாருக்கும் நண்பன். என்னைப் பார்த்தாலே எல்லோருக்கும் உற்சாகம் பிறக்கிறது. புன்னகை புரிகிறார்கள்.

நான் எப்படித் தோன்றினேன்? ஒவ்வொரு ஒலிம்பிக்குக்கும் ஒரு சின்னம் உண்டு. மியூனிக்கில் ஒரு நாய்; மாண்ட்ரியாலில் பீவர் என்ற கருகருப்புக்குப் பேர்போன ஜந்து; மாஸ்கோவில் நான்!

என்னைத் தேர்ந்தெடுக்கு முன்னர் ஒலிம்பிக் நிர்வாகக் கமிட்டிக்குப் பல்வேறு யோசனைகள் வந்தன. ஓவியர்களுக்குப் போட்டி வைக்கப்பட்டது. அவர்களுள் பெரும்பாலோர் வன விலங்குகளைத்தான் குறிப்பிட்டார்கள். அந்த மிருகங்களில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பதற்கு மக்கள் அபிப்பிராயம் கோரப்பட்டது. டெலிவிஷன் ரசிகர்கள் தங்கள் வோட்டினை வழங்குமாறு வேண்டப்பட்டனர். பெரும்பான்மையினர் என்னையே தேர்ந்தெடுத்தனர்.

நாற்பதாயிரம் கடிதங்கள் வந்தன. அநேகமாக எல்லோருமே கரடிக் குட்டிதான் வேண்டும் என்றனர்!

இது இயற்கையே. என்னை எல்லோரும் விரும்புகின்றனர். குழந்தைப் பிராயத்தில் கரடிப் பொம்மை வைத்துக் கொண்டு விளையாடுகின்றனர். கரடிக் குட்டி பற்றி எத்தனை கதைகளைக் குழந்தைகள் கேட்கின்றன. வயதானாலும் அந்த இளமைக் கால நினைவுகள் போகுமா?

நான் உற்சாக புருஷன் என்பதுடன் பலசாலி, நேர்மையானவன் என்பதாலும் எனக்குப் புகழ். நான் நடக்கும்போது பார்த்தால் கொஞ்சம் கோணு மாணுவென்று இருக்கும். ஆனால் ஒரு அவசரத்துக்கு என்றால் வெகு வேகமாய் ஓட முடியும்!

ஒரு முறை ஒரு ரயில்வே பணியாளன் தண்டவாளத்தில் தன் சோதனை வண்டியைச் செலுத்திக் கொண்டிருந்தான்? பக்கத்து லைனில் ஓடும் ஒரு கரடியைப் பார்த்தான். உடனே தன் வேகத்தை அதிகரித்தான். 60 கிலோ மீட்டர் வேகத்தில் தன் வண்டியை ஓட்டியும் கரடியை அவனால் முந்த முடியவில்லை! இப்படி மூன்று கிலோ மீட்டர் ஓடிய பிறகு தான் கரடி அலுத்துப் போய் தண்டவாளத்தை விட்டு இறங்கிப் பக்கத்தில் கானகத்தில் புகுந்து மறைந்தது. ஆக, அன்று அந்தக் கரடி நூறு மீட்டர் பந்தயங்கள் முப்பதில் கலந்து கொண்டு வென்றதாய் அர்த்தம்! எனவே அது ஒலிம்பிக் வீரனாக விளங்கத் தகுதியுடையதுதானே?

டி.வி. ரசிகர்கள் வோட்டெடுப்பில் என்னைத் தேர்ந்தெடுத்த பிறகு என்னைக் கவர்ச்சிகரமாகப் படம் எழுதப் பல ஓவியர்கள் போட்டியிட்டனர். அவர்களுள் விக்டர் சிஷிகோவ் சற்று வேடிக்கையாக என்னை வரைந்து பார்ப்பவர் எல்லாம் புன்னகைக்கும்படி செய்து பரிசினைத் தட்டிச் சென்றார்.

அவரும் ஒன்றல்ல; பல படங்களைப் போட்டார். அவற்றுள் எந்த ஒன்று தமது மகனுக்கு மிகவும் பிடித்திருந்ததோ அதனை ஒலிம்பிக் கமிட்டிக்கு அனுப்பினார்!

ஒலிம்பிக் ஞாபகார்த்த மரச் சிற்பமாக அல்லது உலோகச் சிற்பமாக இப்போது நான் உலகில் திரும்பின பக்கமெல்லாம் காட்சி தருகிறேன். தவிர, சித்திரமாகத் தபால் தலைகளில், கைக்குட்டைகளில், பனியன்களில், கைப்பைகளில், காகிதப் பைகளில் என்று எதில் பார்த்தாலும் என் படம் அச்சிடப்பட்டுள்ளது. ஏன், இந்த வாரக் கல்கி மேலட்டையிலே கூட நடனத்தின் ஜோக்குகளை ரசித்துக் கொண்டு இருப்பது போன்ற தோற்றத்தில் நான் இடம் பெற்று விட்டேன் அல்லவா?

# கண்ணன் அவன் தோழன்...



கண்ணபிரானின் குருகுலவாச இணை பிரியாத் தோழர் சுதாமன் (குசேலர்). அவர் நற்பண்புகள் நிறைந்த அறிஞர். இருப்பினும், தன் மிகப்பெரிய குடும்பத்தால் அன்றாட வாழ்க்கைக்கே அல்லாடிக் கொண்டிருக்கும் பரம ஏழை. ஒரு நாள், தன் மனைவியின் தூண்டுதலின் பேரில், துவாரகாபுரியின் மன்னனான கிருஷ்ணனை நேரில் கண்டு, தன் வறிய நிலைக்கு உரிய பரிகாரம் தேடப் புறப்படுகிறார். அரசனுக்கு அன்பளிப்பாகத் தன் மனைவி தந்த அவலைத் தன்னுடைய கந்தல் துணியில் முடிந்து எடுத்துச் செல்கிறார்

குசேலரைக் கண்ட கிருஷ்ணன் மிகுந்த அன்புடன் அவரை வரவேற்று, உபசரித்து, அவருடன் அளவளாவுகிறான். குசேலருக்குத் தான் கொண்டு வந்திருந்த அவலைக் கிருஷ்ணனிடம் கொடுக்க மனம் வரவில்லை. அவரது மனநிலையைத் தெளிவாகப் புரிந்து கொண்ட கிருஷ்ணன், அவரது கந்தல் துணியில் முடிந்துள்ள அவலை உரிமையுடன் எடுத்து, மிகுந்த ஆவலுடன் ஒரு கை உண்கிறான். கிருஷ்ணனின் வேற்றுமை பாராட்டாத ஆழ்ந்த அன்பில் கட்டுண்டு திளைத்த குசேலர், தன் நிலையைச் சொல்ல மறந்து, கிருஷ்ணனிடம் விடைபெற்று ஊர் திரும்புகிறார்.

இல்லத்தை நெருங்கும் தருவாயில், தான் கிருஷ்ணனிடம் உதவி ஏதும் கேட்க வில்லையே, மனைவிக்கு என்ன சமாதானம் சொல்வது என்று புரியாமல் குழம்பியவாறே குசேலர் தன் எளிய குடிலை அடைகிறார். ஆனால் என்ன ஆச்சரியம்! அவரது சிறிய குடில் பெரிய மாளிகையாக மாறி, அவரது மனைவி மக்கள் அனைவரும் பட்டாடைகளும், அணிகளும், மணிகளும் அணிந்து செல்வந்தர் களாகக் காட்சி தருகிறார்கள்! எல்லாம் அந்த மாயக் கண்ணனின் கருணை மிக்க திருவிளையாடலே என்று உணர்ந்த குசேலர் கிருஷ்ணனை எண்ணித் துதிக்கிறார்.

—ஸ்ரீமத் பாகவதக் கதை

நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.

**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

# ஒரு இரவு கழியவில்லை

எம்.கே. சங்கரன்



"உன் தாத்தா னார்னு நினைச்சியோ. நீ போகவே கூடாது" - கத்தினான் ராகவன்.

"அப்பா ...!" சிணுங்கினாள் சீதா. "நான் சின்னக் குழந்தையா? காலேஜில் படிச்சிருக்கேன். உலகத்தையே ரவுண்டடிக்க என்னால் முடியும்."

"அப்பா! எவன் தலையிலாவது இவளைக் கட்டி அனுப்பிச்சுடுங்க. அவன் இவளை எங்கு வேண்டுமானாலும் அழைத்துப் போகட்டும்."

எனக்கு யார் துணையும் அவசியம் இல்லை. திருமணம் உனக்குத் தேவையானால் நீ முடித்துக் கொள்ளேன்."

"நான் ஆண் சிங்கம். எப்போ வேணுமானாலும் திருமணம் செய்து கொள்ளலாம். எங்கேயும் போய் வரலாம். எவ்வளவு படித்திருந்தாலும் நீ ஒரு பெண்தான். பாதுகாக்கப்பட வேண்டியவள். திருமணம் ஒன்று தான் உன்னைப் பாதுகாக்க முடியும்."

"என்னைப் பாதுகாத்துக் கொள்ள எனக்குத் தெரியும்."

சீதாவின் தோழிகள் எல்லோரும் சேர்ந்துபம்பாய், டில்லி என்று ஒரு டூர் புரோகிராம் போட்டனர். சீதா முன்னணியில் வந்து ஒப்புக் கொண்டாள். அப்பாவிடம் எளிதாகப் பர்மிஷன் வாங்கிவிடலாம் என்பது அவள் நம்பிக்கை. அண்ணா இடையில் இப்படித் தடிவெட்டிப் போடுவான் என்று அவள் நினைக்கவே இல்லை. அவன் போட்ட பலமான முட்டுக்கட்டை சீதாவை அந்தப் பயணத்தில் பங்கு கொள்ள முடியாதவாறு செய்துவிட்டது விட்டது.

பதினைந்து நாள் சுற்றுப் பயணத்தை முடித்துக்கொண்டு வந்த தோழிகள் உல்லாசமான அனுபவங்களை விவரிக்கும்போது சீதாவுக்கு அவமானம் ஒரு புறம், தவிப்பு ஒருபுறம். இதே சுற்றுப் பயணத்தைத் தன்னந் தனியாகப் போய் வெற்றிகரமாக முடித்து அண்ணாவின் முகத்தில் கரிபூசிவிட வேண்டும் என்று திட்டமிட்டாள்.

சீதாவுக்குக் கோகிலாவின் நினைவு வந்தது. எவ்வளவு துணிச்சலான பெண்! சீதாவுடன் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போது பம்பாயிலிருந்து வந்த ஒருவனைக் காதலித்தாள். தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் ரகசியமாகத் திருமணம் செய்து கொண்டாள். பெற்றோர்கள் அவளைக் கை கழுவி விட்டனர். அதைப் பற்றி அவள் கவலைப் படவில்லை. படிப்பை நிறுத்திவிட்டு அவனுடன் பம்பாய் சென்று விட்டாள். சீதாவுக்கும் அவள் அடிக்கடி கடிதம் எழுதுவாள்.

பம்பாய் எக்ஸ்பிரசுக்கு ரிசர்வேஷன் செய்தாள். பம்பாயில் எதிர் பார்க்கும்படிகோகிலாவுக்குக் கடிதம் எழுதினாள். அனுமதி பெறாமல் புறப்படுவதற்குத் தன்னை மன்னிக்கும்படியும், தன் செயலைத் தவறாக நினைக்காமல் ஒரு சாதனையாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் தந்தைக்கு உருக்கமாகக் கடிதம் எழுதி வைத்து விட்டுப் புறப்பட்டு விட்டாள்?



ரயில் புறப்படச் சிறிது நேரம் இருந்தது:

அந்தக் கம்பார்ட்மென்டில் சீதாவைத் தவிர எல்லோரும் வெளி மாநிலத்தினர். எத்தனை வகையான மனிதர்கள்! பேசுவதோ புரிந்துகொள்வதோ வெவ்வேறு மொழிகள். ஆனால் இதயம்? ஆசையும் உணர்வுகளும் எல்லோருக்கும் பொதுவானதுதானே?

ஜன்னல் ஓரத்தில் செக்கச் செவேலென்று சுருள். முடி. கவர்ந்திழுக்கும் தேஜஸ் நிறைந்த முகம்.

அந்த இளைஞன் சீதாவைத் நீட்சண்யமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். பல மொழி பேசும் அந்தக் கூட்டத்தில் அவள் பேசிப் புரிந்து கொள்ளும் ஒரே மனிதன் அவன்தான்.

ரயில் புறப்படும் சமயம் அவன் சீதாவின் அருகில் வந்து அவளைப் பார்த்துப் புன் முறுவல் பூத்தான்.

அவன் விஷமத்தனம் செய்கிறானோ?

''உங்கள் பக்கத்தில் உட்காரலாமா?''

திடீரென்று அவன் கேட்டதும் \ கோபக் கனல் தெறிக்க அவனைப் பார்த்தாள். அவன் தன் ரிசர்வேஷன் டிக்கட்டைக் காட்டினான். அவளுக்குப் பக்கத்து சீட். என்ன பதில் சொல்வது?

சீதா எதிர்பார்க்கவில்லை. பளிச்சென்று அவன் பக்கத்தில் அமர்ந்து கொண்டான். சீதா சற்று விலக அவன் சௌகரியமாக அமர்ந்து கொண்டு அவளை நெருக்கியடித்தான். அவளிடம் பேச்சுக் கொடுக்க முயன்றான். அவனிடம் இயல்பாய் இருந்த ஆண்மையின் கம்பீரம் அவளுக்குச் சவாசல் விடுவது போல் இருந்தது.

எதிர் வரிசையில் இருந்த வடநாட்டுப் பெண் அவர்கள் நடவடிக்கைகளைக் கவனித்துக்கொண்டிருந்தாள். இளம் தம்பதியர்களின் ஊடலோ என்று நினைத்துவிட்டாள்.

''உங்கள் மனைவிக்கு உங்களிடம் கோபமா?'' என்று அவனிடம் ஆங்கிலத்தில் கேட்டாள்.

''நோ! நோ! மனைவியில்லை. ஃப்ரண்ட்''

சீதா கோபத்தோடு ''நான் உங்கள் ஃப்ரண்ட் இல்லை'' என்றாள்.

''பிரயாணம் செய்யும்போது நாம் எல்லோரும் ஃப்ரண்ட்ஸ்தான். நாம் ரெண்டு பேரும் ஜோடியாய் இருப்பதைப் பார்த்து நம்மைத் தம்பதி என்று நினைத்துவிட்டாள். ஏனென்றால் நீங்கள் பிறந்த மண்ணும் நான் பிறந்த மண்ணும் ஒரே மண் இல்லையா?''

''நான் பிறந்த மண்ணில் முன் பின் தெரியாத ஆண் பெண்கள் பக்கத்தில் அமர்வது அனுமதிக்கப்படுவதில்லை.''

''நான் பிறந்த மண்ணில்கூட கன்னிப் பெண் தனிவழி செல்ல அனுமதிப்பதில்லை. காலமும், நாடு தேசங்களும் நமக்குக் கற்றுத் தந்த பாடங்கள். என்ன செய்வது!''

அவன் பேச்சுக்குப் பேச்சு பேசுவான் போலிருந்தது. சீதா பேசுவதை நிறுத்திக் கொண்டாள்.

தாதர் வந்ததும் அவன் இறங்கிப் போய் விட்டான். வி. டி. ஸ்டேஷனில் சீதாவை எதிர்பார்த்து நின்ற கோகிலா மகிழ்ச்சியுடன் வரவேற்று அவளை அழைத்துச் சென்றாள்.

பம்பாய் நகர அழகுக்கு மாறுபட்ட ஒரு பழைய கட்டிடத்தில் நான்காவது மாடியில் ஒட்டுக் குடித்தனம் இருந்தாள் கோகிலா.

''சீதா! நீ வெஜிடேரியனா? நான் வெஜிடேரியனா?'' கோகிலா கேட்டாள்.

''என்னடி இது! நீயும் சரி, நானும் சரி வெஜிடேரியன்தானே?''

''இப்போது நான் கோழியானாலும் சரி ஆடானாலும் சரி எதையும்விடுவதில்லை.''

கோகிலா மாமிசம் பட்டுமல்ல; மதுவையும் அதிகமாகக் குடித்தாள்.

கோகிலாவுக்கு இந்தப் பழக்கம் எப்படி ஏற்பட்டது? நாகரிகத்துக்காகக் குடிக்கிறாளா? உண்மையில் தேவைதானா?

மறுநாள்.

''சீதா, நேற்று ரொம்பக் குடிச்சுட்டேன். உனக்குத் தொந்தரவுகொடுத்திட்டேனா?''

''எனக்குத் தொந்தரவுஒண்ணுமில்லை. ஆனால் நீ



அளவுக்கு மீறிக் குடித்து அறிவை ஏன் இழக்கணும்?''

''அறிவை இழக்கணும்னுதான் குடிக்கிறேன். நான் ஒருவனைக் காதலித்து, பெற்றவர்களைச் சட்டை செய்யாமல் கல்யாணம் செய்துகொண்டது உனக்குத் தெரியும். அந்தக் கல்யாணமே எனக்கு ஒரு விபத்தாப் போச்சு. நான் குடிப்பது மாமிசம் சாப்பிடுவது எல்லாம் அவன் தந்த பழக்கங்கள். இப்போது அவனுக்கும் எனக்கும் தொடர்பில்லே. சூழ்நிலையும் இளமையும் என்னைப் படுகுழியில் தள்ளிக் கொண்டிருக்கின்றன. அந்த நேரங்களில் நான் அறிவு மயங்கக் குடிக்கிறேன்.''

''உன் அறிவு மயங்கிய நேரத்தில் ஏதாவது தப்பு நடந்துச்சுன்னா?''

''அறிவில்லாத வேளையில் நடக்கும் தவறைப் பற்றி நான் ஏன் கவலைப்படணும்?''

கோகிலாவின் பேச்சும் நடவடிக்கைகளும் விசித்திரமாக இருந்தன. பெண் உரிமை என்னும்போது அவள் முன்னணியில் இருந்தாள். இப்போது அவள் நடவடிக்கைகளைப் பார்க்கும்போது இவள் பெண்தானா என்று எண்ணத் தோன்றுகிறது.

அன்று முழுவதும் பம்பாய் நகரைச் சீதாவுக்குச் சுற்றிக் காட்டினாள் கோகிலா. இரவு கோகிலா அழைத்துச் சென்ற இடம்...

ஹோட்டல் என்ற பெயரில் ரகசியமான உல்லாச விடுதி. கோகிலா குடிக்க ஆரம்பித்தாள். அவள் அறிவு மாறிப் பிதற்றத் தொடங்கினாள்.

திடீரென்று ஒருவன் சீதாவை முரட்டுத்தனமாகப் பற்றி அணைத்துக் கொண்டான்.

''நோ! நோ!'' என்று அலறினாள் சீதா.

தனித்து விடப்பட்ட சீதா ஆபாசம் சூழ்ந்த அந்த உலகில் திணறிக் கொண்டு அலைந்தாள்.

திடீரென்று அவள் கண்களில் ஓர் ஒளி.

அவனேதான். ரயிலில் சந்தித்தவன்.

அவன் அருகில் விரைந்தாள்.

''ஹலோ!''

''என் பெயர் ரமணன்.''

''மிஸ்டர் ரமணன், உங்களை நான் இங்கு எதிர்பார்க்கவில்லே.''

''நான்கூட இந்த இடத்தில் உன்னை எதிர்பார்க்கவில்லே. உனக்கும் கம்பெனி கிடைக்கல்லையா?''

''இப்பொழுது நீங்கதான் எனக்குக் கம்பெனி கொடுக்கணும்.''

''நோ! நோ! எனக்கு அந்த மாதிரிப் பழக்கமெல்லாம் கிடையாது. என் நண்பன் சதீஷ் அடிக்கடி இங்கு வருவான். அவனைத் தேடிக்கொண்டுதான் இங்கு வந்தேன். சதீஷ் இருந்தால் கம்பெனி கொடுப்பான். நிறைய பணம் தருவான்.''

சீதா திடுக்கிட்டாள்.

''என்னைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''கோகிலா ஒரு கால் கேர்ள். அவளோடு வந்த உன்னைப் பற்றி நான் எப்படி நினைக்கிறது?''

''கோகிலா கால் கேர்ளா?'' சீதா அதிர்ச்சியடைந்தாள்.

''உன் எதிரிலேயே ஒருவன் அவளை மாடிக்குத் தூக்கிப் போகலையா?''

''ரமண், என்னை நீங்கதான் காப்பாத்தணும். கோகிலா என்னோடு படித்தவள். பம்பாய்க்குத் தனியாக வந்த நான் அவள் விருந்தினளாக இருக்கிறேன். அவளைப் பற்றி நீங்க சொல்லித்தான் தெரிகிறது.''

சீதா சாதனையை நிறைவேற்றிக் கொள்ள வந்ததை ரமணனிடம் விவரித்தாள்.

ரமணன் சீதாவைத் தீர்க்கமாகப் பார்த்தான். ''உன்னை நம்புகிறேன், வா, பேசிக் கொண்டிருக்கலாம்'' - அவளை அங்கிருந்த ஆசனத்துக்கு அழைத்துச் சென்றான்.

கோகிலா சீதாவைத் தேடிவந்தாள்.

''உன்னைப் பற்றி ஏதேதோ கேள்விப்படுகிறேன்.''

''நான் கால் கேர்ள். இதுதானே? பெண்மைக்குரிய அடக்கம் மீறியதால் ஏற்பட்ட விளைவுதான் இது. இங்கு வரும் பெண்கள் எல்லோருமே என்னைப் போல் துணிச்சல்காரிகள். நீயும் துணிந்து வந்தவள்தான். இதைப் பெரிய விஷயமாக எடுத்துக்க மாட்டேன்னு நினைக்கிறேன். வா, போகலாம்.''

---

பாலையாவின் மகள் செல்வி சித்திராவாக பாலையா ஒருத்திதான் நன்றாக நடித்திருக்கிறாள். எல்லாமே புது முகங்கள் என்று பீற்றிக் கொள்வதில் பயனில்லே. சினிமாவுக்குத் தேவையான கவர்ச்சி, அழகு எதுவுமே இல்லாத அசட்டு முகங்களைப் புகுத்திவிட்டால் அது சாதனையாகி விடாது!

பெண்ணை ஓட ஓட விரட்டிக் கற்பழிக்கும் ஆபாசம்; இரண்டாம் தாரமாகக் கிழவனை மணந்த நடுத்தர வயதுக்காரிக்கு ஒருவன் சுகம் தருகிற ஆபாசம்; காமெடி ஒரே ஆபாசம்; வண்ணப் படத்தில் மிகமிகப் பச்சையாக இருப்பது வசனம்!

இந்த லட்சணமான படத்துக்கு பாரதியாரின் கவிதையைப் பொருத்தம் இல்லாமல் தலைப்பாக உபயோகித்திருக்கிறார்கள். பாரதி நூற்றாண்டு நெருங்குகிறது. அவருக்கு இதைவிடப் பெரிய துரோகம் என்ன செய்ய முடியும்?

அன்னை பராசக்தி மீனுவின் மேல் ஆவிர்ப்பவித்துத் தீயவர்களைத் தண்டிக்கிறாளாம்! இப்படிக் கண்டதையெல்லாம் சேர்த்து நம் நாட்டுப் பாமர மக்களை ஏமாற்றுவது எத்தனை நாட்களுக்குச் செல்லும்? — காந்தன்



''கோகிலா, உன்னைப் பத்தித் தெரிஞ்ச பிறகு உன்னோரு வரக் கூச்சமா இருக்கு. இவர் என் ஃப்ரண்ட் ரமணன். இன்று எனக்குத் துணை இவர்தான்.''

''நீ குழம்பிப் போயிட்டே. நான்தான் கெட்டுவிட்டேன். உன்னைக் கெடுக்க மாட்டேன். ஆண்களோடு பழகும்போது ஜாக்ரதையா இருக்கணும். நான் ரூமுக்குப் போகிறேன். நீ சீக்கிரமா வந்துவிடு.''

கோகிலா போனதும் ரமணன், ''நான் உன் ஃப்ரண்ட் இல்லியே!'' என்றான் குறும்புடன்.

''அன்று சொன்னதை நான் வாபஸ் வாங்கிக்கொள்கிறேன். புது இடத்தில் ஒரே மொழியைச் சேர்ந்தவர்கள் சந்திக்கும் போது இயற்கையிலேயே தோழமை உணர்வு ஏற்படுகிறது.''

''உன்னைச் சந்திச்ச பிறகு எனக்கு இந்த இடத்தை விட்டுப் போகவே மனமில்லை'' என்றான் ரமணன்.

அதை ஆமோதிப்பது போல் சீதா தலை கவிழ்ந்தாள்.

ரமணன் மெதுவாக, ''நாமும் ஆடலாமா?'' என்றான்.

''நோ! ப்ளீஸ்!''

''தயக்கம் ஏன்?''

ரமணன் சீதாவின் கரங்களைப் பற்றினான். சீதா கட்டுண்டவள் போல் எழுந்து நின்றாள். தன்னை மறந்த வேளையில் திடீரென்று...

அவள் எதிர்பார்க்கவே இல்லை. கையால் தடுத்திராவிட்டால்... இதழ்களில் பதிய வேண்டியது உள்ளங்கையில் பதிந்துவிட்டது!

''இப்படிச் செய்வீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை.'' ஒன்றைப் பறிகொடுத்த தவிப்புடன் சொன்னாள்.

''என்னை மறந்துவிட்டேன். மன்னிச்சுடு!''

''இனி இங்கிருக்க வேண்டாம். உடனே போகணும்'' என்றான்.

இருவரும் வெளியே வந்தனர்.

**ந**டு நிசி.

''என் அறையில் தங்கலாம். வருகிறாயா சீதா?''

''அது நன்றாக இருக்குமா?''

''தன்னந் தனியாக வெளி மாநிலத்துக்குத் துணிந்து வந்த உனக்கு இந்தக் கேள்வி வருவது ஆச்சரியம்தான்.''

''நான் வருகிறேன். ஒரு நிபந்தனை. ஹோட்டலில் நடந்த மாதிரி நடந்துவிடக் கூடாது.''

''ப்ராமிஸ்.''

வசதியான அறை. ஒரு சோபா. ஒரே கட்டில்.

''சீதா பெட்டில் படுத்துக்கொள். சோபாவில் நான் சாய்ந்துக் கொள்கிறேன்.''

சீதா படுத்துக் கொண்டாள். ரமணன் போர்வையால் அவள் உடம்பை மூடினான்.

''தாங்க்ஸ்!''

சீதாவின் இமைகள் மூடின. ரமணன் ஸ்டீரியோவை மெல்லிய ஒலியில் இயக்கி



''உள்ளே வந்த பிறகும் வெளியே போன பிறகும் கதவுகளை மூடி விடவும்''

னான். ஹோட்டலில் கேட்டது போன்ற மயக்கும் இசை.

''தயவு செய்து ஸ்டீரியோவை நிறுத்த நீங்களா?''

ரமணன் ஸ்டீரியோவை 'ஆப்' செய்து விட்டுச் சிகரெட் ஒன்றைப் பற்றவைத்தான். சீதா எழுந்து உட்கார்ந்தாள். கருள் கருளாக அவன் புகை விடும் அழகைப் பார்த்துக் கொண்டு இருந்தாள்.

''சீதா, அழகு நிறைந்த ஒரு பெண்ணுடன் தனி அறையில் தங்குவது கஷ்டமானது தான்'' ரமணன் பெருமூச்சு விட்டான்.

ரமணனை ஏறிட்டு நோக்கினாள் சீதா. அவன் நிலை சரியில்லாதது போல் ஒரு தோற்றம். ரமணனால் ஆபத்து ஏற்படாமல் தடுக்க அவளால் முடியும். ஆனால் தனக்குத் தெரியாமல் தன்னால் ஓர் ஆபத்து அணுகுவது போல் பிரமை உண்டாகிக் கொண்டிருந்தது.

''ரமணன், நான் கோகிலாவிடம் போகலாம் என்று நினைக்கிறேன்'' என்றாள்.

''ஏன் சீதா?''

''கோகிலா குடி வெறியில் இருந்தாலும் அவளால் ஆபத்து இல்லை. இங்கு குடிக்காமலேயே....''

''நான் அத்துமீறி நடந்துவிடுவேன் என்று பயப்படுகிறாயா?''

''உங்களைத் தடுக்க என்னால் முடியும்.''

''புரிந்துவிட்டது. உனக்கே நீ பயப்படுகிறாய். அப்படித்தானே ''

அவளிடம் பதில் இல்லை.

''புறப்படு. கோலாவிடமே விட்டு விடுகிறேன்.''

மறுநாள் பிரயாணத் திட்டங்கள் அனைத்தையும் கேன்சல் செய்துவிட்டு சீதா ரயிலில் ஊர் நோக்கி அவசரமாகத் திரும்பிக் கொண்டிருந்தாள். தான் பாதுகாக்கப்பட வேண்டியவள் என்பது அவளுக்குப் புரிந்து கொண்டிருந்தது.

# ஒலிம்பிக் அதிசயங்கள்



✖ அயல் நாட்டு விளையாட்டு வீரர்கள் தங்கப் போகும் ஹோட்டல் ரஷ்யா

**இந்த ஆண்டு ஜூலைமாதம் 19ந் தேதியிலிருந்து ஆகஸ்டு மாதம் 4ந் தேதி வரை மாஸ்கோவில் நடைபெறும் ஒலிம்பிக் 80 பற்றியச் சில அதிசயங்கள்:**

இந்த ஒலிம்பிக் விளையாட்டுக்காக ரஷ்யா மொத்தம் 1600 கோடி ரூபாய் செலவில் ஒரு புதிய ஒலிம்பிக் நகரத்தையே நிர்மாணித்திருக்கிறது. இதற்கு முன்பு 1972ம் ஆண்டிம் மேற்கு ஜெர்மனியில் மியூனிக் நகரத்தில் ஒலிம்பிக் நடைபெற்றபோது செலவான தொகை 400 கோடி ரூபாய். 1976ம் ஆண்டில் கனடாவில் மாண்ட்ரியல் நகரத்தில் ஒலிம்பிக் நடக்கச் செலவான தொகை 760 கோடி ரூபாய்.

ஒரு நாட்டில் ஒலிம்பிக் விளையாட்டு நடைபெற வேண்டுமென்றால் ஒரு தனி நகரமே உருவாக்க வேண்டி வரும். இதற்காகப் போக்கு வரத்து வசதி, சர்வதேச விமான வசதி, சர்வ தேச விளையாட்டு வீரர்கள் தங்குவதற்கு இட வசதி, ஒலிம்பிக் விளையாட்டுக்களைக் காண வரும் வெளி நாட்டு யாத்திரிகர்கள் தங்குவதற்கு இட வசதி, எல்லோருக்கும் உணவு வசதி என்று பல அம்சங்களைக் கவனித்து முன்னேற்பாடாகச் செய்ய வேண்டி வரும்.

ஒலிம்பிக் நகரத்தில் வெளி நாட்டு யாத்திரிகர்கள், விளையாட்டு வீரர்கள் தங்குவதற்காக 107 ஏகரா நிலத்தில் 16 மாடிகளைக் கொண்ட 18 வீடுகள் புதிதாகக் கட்டப்பட்டுள்ளன. சர்வ தேச தபால் நிலையம், சர்வ தேச தந்தி நிலையம், உணவு விடுதிகள் மருந்துக் கடைகள், மருத்துவ மனை, விளையாட்டு அரங்கம் யாவும் இந்நகரத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

ஒலிம்பிக் விளையாட்டு முடிந்த பிறகு இந்த ஒலிம்பிக் நகரத்தில் சுமார் 15000 ரஷ்யக் குடும்பங்கள் நிரந்தரமாக வசதியாக வாழலாம். ஒரு புதிய டெலிவிஷன் டவரும், ரேடியோ நிலையமும் அமைக்கப்பட்டுள்ளன. ருஷ்ய நாட்டில் எந்த ஊரிலும் வீட்டில் இருந்தபடி தொலைக்காட்சிப் பெட்டி மூலம் ஒலிம்பிக்கைக் கண்டு களிக்கலாம். தவிர செயற்கைக் கோள் மூலம் உலகெங்கும் சுமார் 200 கோடி மக்கள் தொலைக் காட்சிப் பெட்டியில் பார்த்து மகிழலாம்.

ஒலிம்பிக் விளையாட்டுக்காக மாஸ்கோவில் உள்ள 5,000 டாக்சி டிரைவர்களுக்கு ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானிஷ், ஜெர்மன், ஃபின்னிஷ் ஆகிய ஐந்து மொழிகளிலும் பேசுவதற்குப் பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கட்டாய மொழிப் பயிற்சி டிரைவர்களுக்கு மாத்திரம் அல்ல. மாஸ்கோவில் உள்ள எல்லா உணவு விடுதிகளில் பணியாற்றும் சர்வர்களுக்கும் பயணியர் விடுதிகளில் பணியாற்றுவோருக்கும் உண்டு. தவிர ஃபிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கிலம் ஆகியமொழி

✖ ஒலிம்பிக் போஸ்டர்



✖ ஒலிம்பிக் மத்திய ஸ்டேடியம்





✖ பத்திரிகையாளர் கேந்திரம்



✖ ஒலிம்பிக் ஞாபகார்த்த ஸ்டாம்புகள்

களைக் கற்றறிந்த சில ஆயிரம் பேர்களைத் தாற்காலிகமாக உணவு விடுதிகளில் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர்.

ஒலிம்பிக் விளையாட்டுக்களுக்கு ஏற்கனவே உலகமெங்கும் டிக்கெட்டுகள் விற்பனையாகி விட்டன. 58 லட்சம் டிக்கட்டுகள் சென்ற ஆண்டிலேயே விற்பனையாகி விட்டன. இவை அதிகமாக மியூனிக் (ஜெர்மனி) மாண்ட்ரியல் (கனடா) நகரங்களில் விற்பனையாகியுள்ளன.

ஒலிம்பிக் கமிட்டி 133 நாடுகளில் டிக்கட் விற்பனைப் பிரதிநிதிகளை நியமித்தது. டிக்கட் 2 அமெரிக்க டாலர் முதல் 18 அமெரிக்க டாலர்வரை மதிப்புள்ளது.

பாஸ்கெட் பால், நீச்சல் பந்தயம், வாலி பால் ஆகிய விளையாட்டுக்களுக்கான டிக்கெட் டுகள்தாம் அதிகமாக விற்பனையாகியுள்ளன.

அந்நிய நாடுகளிலிருந்து வரும் யாத்திரிகர்களின் போக்குவரத்து நெரிசலைச் சமாளிப்பதற்காக மாஸ்கோ முனிசிபல் கமிட்டி 185 கிலோ மீட்டர் நீளத்துக்கு ஒரு புதிய டிராம் வண்டிப் பாதை உருவாக்கியுள்ளது.

உலகெங்கிலுமிருந்து சுமார் 3,100 பத்திரிகையாளர்களும், 400 புகைப்படக்காரர்களும், 100 செய்திச் சுருள்பட நிருபர்களும், 800 தொலைக் காட்சி, ரேடியோ வர்ணனையாளர்களும் 3000 தொலைக்காட்சி ரேடியோ நிருபர்களும் உலகின் பல பாகங்களிலிருந்தும் வருகிறார்கள்.

தினந்தோறும் சுமார் 60,000 பேர்கள் அந்நிய நாடுகளிலிருந்து வருவார்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. விமானங்கள் வந்து இறங்குவதற்காக எல்லா வசதிகளும்கொண்ட நவீன விமான நிலையங்கள் நான்கு அமைக்கப்பட்டுள்ளன! 1500 சர்வ தேச தொலைபேசிகள் அமைக்கப்பட்டுள்ளன.

ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நடக்க மொத்தம் நான்கு நவீன ஸ்டேடியங்கள் உருவாகியுள்ளன. ஒலிம்பிக் பந்தயத்தில் வெற்றி பெறுபவர்களைத் தேர்ந்தெடுக்க சுமார் 3,500 நீதிபதிகள் நியமிக்கப்பட்டுள்ளனர். 900 நீதிபதிகள் அந்நிய நாடுகளிலிருந்து வந்தவர்கள்.

அண்டை நாடுகளிலிருந்து சுமார் மூன்று லட்சம் பேர் கார்கள் மூலம் வருவார்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இதற்காக ருஷ்ய எல்லையிலிருந்து மாஸ்கோ செல்ல அகலமான பாதைகள் அமைக்கப்பட்டுள்ளது.

ருஷ்யத் தபால் தந்தி இலாக்கா ஒலிம்பிக் தபால் தலைகளை வெளியிட்டுள்ளது. ஒலிம்பிக் நாணயங்களுமுண்டு!

தொகுப்பு: மூர்த்தி

✖ லெனின் ஸ்டேடியம்



காகம் கரைந்தது; காலையும் ஆயிற்று
கண்ணுதல் சேயரே வாரும்!
ஒண்ணுதல் நேயரே வாரும்!

செங்கதிர் தோன்றிற்று; தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்!
எங்குரு நாதரே வாரும்!

— திருஅருட்பா

# நூலறுந்த பொம்மை

பி. ரங்கநாயகி

''சௌம்யாதம் காதல் கனிவில் மலர்ந்த புஷ்பம். அதன் மணம் இதயத்தைக் குளிர்விக்கும் தென்றல்!''

சேகர் அவளுக்கு முதன் முதல் எழுதிய கடிதத்தின் ஆரம்பத்தில் வடித்திருந்த கவிதை ரசம் மிகுந்த வரிகளைத் திரும்பத் திரும்பப் படித்தாள் சௌம்யா.

இன்னும் நான்கு தினங்களில் சேகருக்கு இரண்டாம் கல்யாணம்.

'அழகான மலர்', 'இனிமையான கவிதை' என்றெல்லாம் வர்ணித்துச் சௌம்யாவின் மனத்தை ஆட்கொண்டு, மணந்துகொண்டவன், இன்று எல்லாவற்றையும் கலைபுங் கனவாய், மழையில்லா மேகமாய் மாற்றிவிட்டு 'சின்ன மலர்' 'சிறப்பான சங்கீதம்' என்று வர்ணிக்கத்தானோ என்னவோ இன்னொருத்தியைக் கைப்பிடிக்கத் தொடங்கிவிட்டான்.

பாவம் அந்தப் பெண்!

சேகரது வார்த்தைகளுக்கெல்லாம் அர்த்தமே கிடையாது என்றோ, பெற்றவனின் கையால் ஆட்டப்படும் ஒரு பொம்மலாட்டப் பொம்மைதான் அவன் என்றோ அப்பெண்ணுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லைதான்!

''அம்மா... அம்மா... வாசல்லே ஐஸ் வந்திருக்கு.... வாங்கித் தரயா!'' குழந்தை அனிதா ஓடிவரவும் சௌம்யா தன் நினைவு களினின்று மீண்டாள்.

''இதோ பார் அனித்... இந்த வெயில்ல ஐஸ் சாப்பிட்டா இமைர்று குளுமை பண்ணி ஜுரம் வந்துடும். வாசல்லே சாத்துக்குடி போறுக் கூப்பிடு. நான் ஜூஸ் பண்ணித் தரேன்....' என்றாள் சௌம்யா.

''போம்மா... நீ எப்பவுமே இப்படித்தான்'' என்று சற்று அடம் பிடித்துவிட்டு அனிதா விளையாடப் போனாள்.

சேகருடன் வாழ்ந்த மூன்றாண்டு இல்லற வாழ்க்கையின் ஒரே தடயம்தான் அனிதா.

பழைய நினைவுகளின் நீரோட்டம்.

திருநெல்வேலி தாலுக்காவில் ஒரு கிராமத்தில் கணவன் விட்டுப் போன சொற்ப நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டு அவளுடைய தாய் தங்கியிருந்தாள்.

சௌம்யாவுக்கு சென்னை போஸ்டல் ஆடிட் ஆபீஸில் வேலை. வேலை பார்க்கும் பெண்களுக்கான ஓர் இல்லத்தில் தங்கியிருந்தாள்.

அவள் தங்கியிருந்த இடத்துக்கு நான்கு தெருக்கள் தள்ளிச் சேகர் தன் தாயுடன் வசித்து வந்தான்.

இருவரும் குறிப்பிட்ட பஸ்ஸில் தினமும் ஏறுவர். புன்முறுவல் பரிச்சயமாய், சம்பாஷணையாய், சிநேகமாய், பிணைப்பாய், காதலாய்க் கனிந்தது.

சேகருக்குத் திட்சண்யமான அறிவு. பி.ஈ. படித்து நான்கு இலக்க சம்பளம். கவர்ச்சிகரமான உருவம். பெண்களை ஈர்க்கும் கம்பீரம்.

அவனுடன் பழகின பிறகு சௌம்யா ஒரு விஷயத்தைத் தெரிந்து கொண்டாள்.

தாயிடம் அதீதமான ஈடுபாடு அவனுக்கு. சேகருக்கு ஒரு வயதாக இருந்தபோது பொறுப்புக்களை அவனுடைய





காட்டு வழியே போய்க் கொண்டிருந்தான் ஒருவன். எதிரே ஒரு சிங்கம் அவனைப் பார்த்து நாக்கைச் சப்புக் கொட்டியது. தப்பித்து ஓடுவது முட்டாள்தனம் என்று அறிந்து வேறு வழியின்றி மண்டியிட்டு இறைவனைப் பிரார்த்தித்தான். சில நிமிஷங்கள் கழித்துப் பார்த்தால் சிங்கமும் அவனுக்கு எதிரில் மண்டியிட்டுப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தது!

''அட, நீயும் என்னுடன் இறை வணக்கம் செய்கிறாயே!'' என்றான் அவன்.

''ஆமாம், உன்னை எனக்குக் கொடுத்த ஆண்டவனுக்கு நன்றி சொல்கிறேன்!'' என்றது சிங்கம்.

— கோவி. பரஞ்சோதி

தாயின் தலையில் கட்டிவிட்டுத் தந்தை மறைந்து விட்டாராம்.

தனித்து நின்று அவனை ஆளாக்கி, பி.ஈ. வரை படிக்க வைத்து அவன் நிலையாகக் காலூன்றிக் கொள்ளத் தாய் வழிவகுத்தாள் என்பதில் தாயின் மேல் அவனுக்கு அளவிட முடியாத பாசம், பக்தி.

அந்தப் பாசம் வெறித்தலைமானதும் கூட என்ற உண்மை அவனை மணந்துகொண்ட பிறகுதான் சௌம்யாவுக்குப் புரிந்தது.

'தன்னைக் கேளாமல் அவனாகத் தேர்ந்தெடுத்து நேசித்து மணந்து கொண்டிருக்கிறான் என்ற நினைப்பு சேகரின் தாயின் மனத்தில் ஒரு பேரதிர்ச்சியைத் தோற்றுவித்திருக்க வேண்டும்.

இள வயதிலேயே கணவனைப் பறிகொடுத்து விட்டு, கணவனின் சாயல்களை மகனிடம் கண்டு தான் இவ்வுலகில் வாழ்வதன் அர்த்தமே மகன்தான் என்று வாழ்ந்திருந்தவளுக்கு மகன் தானாகவே ஒரு பெண்ணிடம் உளமார்ந்த பிடிப்பைத் தோற்றுவித்துக் கொண்டுள்ளான் என்கிற உண்மை உள் காயத்தை உண்டாக்கி விட்டிருக்க வேண்டும்.

ஆயிரமாயிரம் கனவுகளுடன் கணவன் வீட்டில் அடியெடுத்து வைத்த சௌம்யாவுக்குச் சில தினங்களுக்குள்ளாகவே எல்லாம் ஒரு கானல் நீர் என்று புரிந்தது.

வேலைக்குப் போகிறவள்' என்பதைப் பற்றித் துளிக்கூட நினைக்காமல் அவளை ஒரு செக்கு மாடு போல் வேலை வாங்குவதில் சேகரின் தாய்க்கு ஒரு தனி சுகம்.

சின்னச் சின்னச் சச்சரவுகள் படர்ந்து, சண்டையாய் மனப் பிளவாய் விசுவரூபம் எடுக்க ஆரம்பித்தன.

மகன் தன்னைத்தான் ஆதரிப்பான் என்கிற தைரியத்தில் சேகரின் தாயின் கோணல்மனம் மேலும் விகாரமடையத் தொடங்கிற்று.

சௌம்யாவுக்கு வெகு விரைவிலேயே தன் மாமியாரின் வக்கிரப் போக்குக்கான அடிப்படை 'காம்ப்ளெக்ஸ்' புரிந்தது! ஆனால் அதனால் என்ன பிரயோசனம்?

உயர் படிப்பு இருந்தும் மனைவியின் உள்ளத்தைப் புரிந்துகொள்ளாத ஜடமாக சேகர் இருந்தானே!

இத்தனைக்கும் நடுவில் அனிதா பிறந்தாள். விரிசல் கூடிற்றே தவிரக் குறையவில்லை.

சௌம்யா வாசலில் வந்து இப்படி நிற்கிறாள், இவனைப் பார்க்கிறாள், அவனைப் பார்த்துச் சிரிக்கிறாள் என்கிற ரீதியில் சேகரின் தாய் பேச ஆரம்பித்த சமயத்தில், அவனும் தாயைச் சற்றும் கண்டிக்காமல், சௌம்யாவை நீதி விசாரணை செய்ய ஆரம்பித்த போது ஒரு தோளில் குழந்தையும், இன்னொரு கையில் தன்னுடையதும், குழந்தையுடையதுமான துணிமணிகள் உள்ள பெட்டியுடனும் படி இறங்கினாள் சௌம்யா.

கிராமத்திலிருந்து தாயை வரவழைத்துத் தனியாகக் குடித்தனம் ஆரம்பித்தாள்.

விவாகரத்து நோட்டீஸ்... வழக்கு.... குழந்தை தன்னிடம் இருக்க வேண்டும் என்ற வாக்குவாதம் — இப்படித் தாயின் பேச்சைக் கேட்டு ஆட்டம் ஆடினான் சேகர். விவாகரத்தோடு குழந்தை அவளிடம் தான் இருக்க வேண்டும் என்றும், அவள் தானே சம்பாதிப்பதால் குழந்தையின் ஜீவனத்துக்கு மட்டும் அவன் பணம் அளிக்க வேண்டும் என்றும் கோர்ட் தீர்ப்புக் கூறியது.

நிம்மதியாக ஏற்றுக்கொண்டாள்.

''அம்மா.... சாத்துக்குடி வந்திருக்கு...'' அனிதா மறுபடியும் ஓடிவரவும் சௌம்யா வாசலுக்குப் போய்ப் பேரம் பேசி, சாத்துக்குடி வாங்கி ஜூஸ் பிழிந்து அனிதாவுக்குக் கொடுத்தாள்.

சந்தோஷத்துடன் அனிதா விளையாடப் போனாள். சமையல்கட்டைக் கவனிக்கலாம்' என்று சௌம்யா உள்ளே போன சமயத்தில் தான் 'காலிங் பெல்' சத்தம் கேட்டது. வெளியே வந்தவள் ஒரு கணம் திகைத்து நின்றுவிட்டாள்.

சேகர்தான் வந்திருந்தான்!

'என்ன விஷயம்?' என்று கேட்கிற பாணியில் அவனது முகத்தைப் பார்த்தாள்.

''சௌம்யா.... அம்மாவுக்கு சீரியஸா இருக்கு....'' தட்டித் தடுமாறிச் சொன்னான் சேகர்.

''அப்படியா.... என்ன உடம்பு ....''

''நேத்து ராத்திரி திடீர்னு ஹார்ட் அட்டாக்... புழுவாத் துடிச்சுட்டா... நர்ஸிங் ஹோமிலே சேர்த்து இருக்கேன்... ஒரு மணிக்கு முன்னாலேதான் நினைவு வந்தது.... ஆனாலும் இன்னிக்கு ராத்திரி தாண்டினாத் தான் நிச்சயமா சொல்ல முடியும்னு டாக்டர் சொல்லிட்டார்... நினைப்பு வந்ததுலேந்து உன்னைப் பார்க்கணும்... பேசணும்னு துடிச்சுண்டு இருக்கா... தயவு செஞ்சு வரயா...'' சேகரின் கண்களில் கண்ணீர் வழிந்தது.

''கண்ணைத் தொடச்சிக்கோங்கோ. இதோ வந்துடறேன்...'' என்று சௌம்யா சொல்வதற்கும் சௌம்யாவின் தாய் வெளியிலிருந்து வருவதற்கும் சரியாக இருந்தது.

சேகரைப் பார்த்ததும் அவளுக்கும் திகைப்பு.

''அம்மா... எங்க மாமியாருக்கு உடம்பு ரொம்ப சீரியஸா இருக்காம். என்னைப் பார்க்கணும்னு சொன்னாராம்... அனிதாவைப் பார்த்துக்கோ. நான் போயிட்டுச் சீக்கிரமா வந்துடறேன்.'' என்று தாயிடம் சொன்ன போது, சேகரின் தாயை 'மாமியார்' என்று அழைப்பது எவ்விதத்தில் சரியானது என்கிற

நினைப்பு அவனுள் ஒரு சிறு நகைப்பை உண்டாக்கியது.

சௌம்யாவைக் கண்டதும் சேகரின் தாய் மலங்க மலங்கக் கண்ணீர் வடித்தாள். சௌம்யாவின் கைகளைத் தன் கைகளுடன் பிணைத்துக்கொண்டு அருகில் உட்காரச் சொன்னாள்.

''சௌம்யா, உனக்குத் துரோகம் செஞ்சுட்டேம்மா... நல்ல காலம் தெய்வம் இந்தச் சமயத்திலேயாவது என் கண்ணைத் திறந்தது. நான் பிழைக்க மாட்டேன். மஹாலட்சுமி மாதிரி இருக்கிற உன்னைத் தள்ளி வக்கச் சொல்லிட்டு அவனுக்கு இன்னொரு கல்யாணம் பண்ண முனைஞ்சேனே! எனக்கு என்ன தண்டனை கெடைச்சாலும் தகும்... நான் போயிட்டேன்னு கல்யாணம் நிந்துடும். சேகரோட சேர்ந்து என் காரியங்களைப் பண்றேன்னு சத்தியம் பண்ணுடீ...'' கேவினாள்.

''உடம்பை அலட்டிக்காதேங்கோ... அவசியம்னு வந்தா உங்க ஆசைக்குக் குறை வெக்க மாட்டேன். ஓய்வு எடுத்துக்குங்க'' என்றாள் சௌம்யா.

அன்று நள்ளிரவு ஒன்னரை மணிக்குச் சேகரின் தாய் போய்ச் சேர்ந்தாள்.

கதறிக் கதறி ஆஸ்பத்திரியையே இரண்டு படுத்திவிட்டான் சேகர். இது மாதிரியான ஒரு மகனைக் கண்டு எல்லோருக்கும் மிகப் பெரிய ஆச்சரியம்.

அவனைச் சிறிது சிறிதாகச் சமாதானப் படுத்தினாள் சௌம்யா.

தாயின் அந்திமக் காரியங்கள் செய்யும் தருணம் வந்தபோது ஏதோ கேள்விக் குறியுடன் சேகர் சௌம்யாவை நோக்கினான்.

''கோர்ட்லே நீங்களும் நானும் கணவனும் மனைவியும் இல்லேன்னு சொல்லிட்டாக்கூட அம்மி மிதிச்சு, அருந்ததி பார்த்து வேத மந்திரங்களோட நீங்க என் கழுத்திலே கட்டின திருமாங்கல்யம் இன்னும் அப்படியே என் கழுத்துலேதான் இருக்கு. என்னைப் பொறுத்த மட்டிலே சேர்ந்து வாழலேன்னாக்கூட நீங்க எப்பவும் என் கணவர்தான்!'' என்றாள் சௌம்யா.

பணத்தை வாரி இறைத்துத் தாயின் அந்திமக் காரியங்களைச் சேகர் செய்தான்.

அன்றுடம் தன் பங்கு முடிந்ததும் இரவு தங்கத் தன் வீட்டுக்குச் சௌம்யா திரும்பி விடுவாள்.

நாட்கள் ஓட்டத்தின் ரசவாத மகிமையில் சேகர் மனம் தேறி வந்தான்.

எல்லாம் முடிந்தது.

''அப்போ... கொடுத்த வாக்கை நிறைவேற்றிவிட்டேன். நான் போறேன்'' என்றாள் சௌம்யா.

''சௌம்யா... அவசியம் நீ போகணுமா? என்னென்னமோ நடந்து போச்சு. எல்லாத்தையும் கெட்ட கனவா மறந்துடு. சாகறச்சே கூட அம்மா இனிமே நீயும் நானும் மறுபடியும் சேர்ந்து இருக்கணும்னுதான் ஆசைப்பட்டுப் போய்ச் சேர்ந்தா... உங்கிட்டே கூடச் சொன்னாளே... எனக்குன்னு இல்லாவிட்டா கூட அம்மாவோட கடைசி அபிலாஷையை நிறைவேற்றக் கூடாதா... என்னை வேணு மன்னிக்க வேண்டாம்'' என்றான் சேகர்.

''அம்மா.... அம்மா... அம்மா... எப்பப் பார்த்தாலும் இதேதானா... என்ன ஆண் பிள்ளை நீங்கள்! ஆம்பிள்ளைன்னு பௌருஷம் வேண்டாம்... சுய சிந்தனை... தனக்கா அபிலாஷைகள், ஆசா பாசங்கள்னு வேண்டாம்! முதுகெலும்போ, சுய சிந்தனையோ இல்லாத உங்களைப் போன்ற ஆம்பிள்ளைகளுக்குக் கல்யாணமும், மனைவியும், குடும்பமும் ஒரு கேடா? அம்மா ஆளாக்கினா என்கிற ஒரே காரணத்துக்காகப் பெண்டாட்டியைக் கின்னு கிரையாக்கி அம்மா சொல்லிட்டாங்கறதுக்காக அவளோட கேரக்டரையே சந்தேகிக்கிறது. அம்மா சொல்லிட்டாங்கறதுனாலே விவாகரத்துப் பண்ணவும் துணியறது. பெத்த குழந்தையைக் கூடப் பார்க்கணும்னு தோணாமக் கல் தானா இருக்கிறது... சீ நீங்க என்ன ஆம்பிள்ளை! இப்பவும்தான் என்ன? அம்மா சாகறச்சே கேட்டுண்டாள்றதுனாலே என்னோட வந்து குடும்பம் நடத்துன்னு கேக்கறேளே... எனக்கு அவமானமா இருக்கு... இப்பவும் சொல்றேன்... என்னிக்கு இவ என் மனைவி இல்லே என்று பிரிக்கணும்னு கோர்ட்லே போய் நின்னேளோ அன்னிக்கே இனிமே உங்களோட சேர்ந்து வாழணும்னு இருந்த ஆசை எதிர்பார்ப்பு எல்லாம் தான் தானா நொறுங்கிடுத்து... என்ன பண்ணினாலும் இனிமே ஒட்டாது. விட்ட குறை, தொட்ட குறை என்பாளே! அது மாதிரி சாகற நிலையிலே இருக்கறப்போ உங்கம்மா கண்ணீர் மலங்கக் கேட்டாளேங்கறதுக்காக அவளோட ஆத்மா சாந்தியடையணும்கறதுக்காக உங்களோட கூட இருந்து காரியங்களை நடத்திக் கொடுத்தேன்.. இனிமே உங்க பாதை வேறே என் பாதை வேறே. கழுத்திலே தொங்குகிற திருமாங்கல்யமும், புடவைத் தலைப்பைப் புடிச்சுண்டு என் பின்னாலே அலையற அனிதாவும்தான் என்னோட பிடிப்புகள்.... நான் வரேன்....'' ஆத்திரமும் அழுகையும் பீறிட்டு வர மூச்சிரைக்க வார்த்தைகளைக் கொட்டிவிட்டு, அனிதாவைத் தூக்கிக்கொண்டு போனாள் சௌம்யா.

பேயறைந்தாற்போல் நின்றான் சேகர்.




குஜராத்தி மக்கள் தங்கள் வீடுகளில் வேலை பார்க்கும் வேலைக்காரர்களின், பெயர்கள் எதுவாக இருந்தாலும் அவனை 'ராமன்' என்று பெயர் சொல்லிக் கூப்பிடுவது மரபு. பி. நாராயணன்.

திரு சங்கரன் பிள்ளை பெருத்த மனப் போராட்டத்துக்குப் பிறகு அந்த முடிவுக்கு வந்துவிட்டார். கொஞ்சமும் அவருக்கு மனமில்லைதான். வேறு வழி இல்லையே! அந்த முடிவுக்கு வந்துதான் ஆக வேண்டியிருந்தது.

சங்கரன் பிள்ளைக்கு வரிசையாக நான்கு பெண்கள். பிறகு இரண்டு பையன்கள். எல்லாப் பெண்களுமே கல்யாணம் செய்யக் கூடிய வயதை அடைந்து விட்டனர். எல்லாப் பெண்களும் பட்டம் பெற்று நல்ல வேலையில் இருந்தனர். ஆயினும் ஒரு பெண்ணுக்குக்கூட கல்யாணம் ஆகவில்லை. மூத்தவளுக்குக் கல்யாணமானால் அல்லவா மற்றவர்கள் கல்யாணத்தைப் பற்றிப் பேச முடியும்? மூத்தவளுக்குக் கல்யாணமாகாமல் தடைப்பட்டு வந்தது. அவளைப் பார்க்க வரும் பையன்கள் எல்லாம் அவள் ஒரு மாதிரி கெந்திக் கெந்தி நடப்பதைப் பார்த்துவிட்டு வேண்டாம் என்று சொல்லி வந்தார்கள்.

''சங்கரன் பிள்ளை, நான் சொல்றேனே என்று தப்பாக நினைக்க மாட்டீர்கள் என்றால் ஒரு விஷயத்தைச் சொல்லட்டுமா?'' என்று பேச்செடுத்தார் நண்பர் நாகலிங்கம் பிள்ளை.

''என்ன சொல்லும்! சும்மா சொல்லும் தயங்காம!'' என்றார் திருவாளர் சங்கரன் பிள்ளை.

''மூத்த பெண்ணுக்கு இப்பவே வயது முப்பது தாண்டிவிட்டது. இவளுக்கு ஏற்ற வரனைத் தேடிப் பிடித்து அடுத்தவளுக்குக் கல்யாணம் பண்ணுவது என்பது இயலாத காரியம். நீர் பெற்ற கிராமத்திலேயே கல்யாணத்தையும் முடிப்பேன் என்று காத்திருந்தீரானால் எந்தப் பெண்ணுக்கும் உம்ம வாழ்நாளிலே கல்யாணம் பண்ணிப் பார்க்கப் போறதில்லை. நான் சொல்றேனே என்று தப்பாக நினையாதேயும்!''என்று கூறி விட்டுப் போய்விட்டார்.

ஒரு வாரமாக சங்கரன் பிள்ளை இவ் விஷயத்தை மனத்தில் போட்டு 'அரை அரை' என்று அரைத்துக் கொண்டிருந்தவர் 'மூத்தவள் சிமந்த புத்திரி - அவளை விட்டு விட்டு அடுத்தவளுக்கு மணம் முடிப்பதா?... ஆனால் யதார்த்த நிலைமையைப் பார்க்கும்போது நாகலிங்கம் பிள்ளை சொன்ன யோசனைதான் சரி என்று பட்டது. இந்த முடிவு எடுக்குமாறு அவர் பனைவி கோமதியம்மாளும், மூத்த மகள் திலகவதியுமே கூறிவிட்டார்கள். திலகவதி, ''என்னால் என் தங்கைகளுக்குக் கல்யாணமாகாமல் தாமதப்பட வேண்டாம்! எனக்குக் கல்யாணம் ஆகும்போது ஆகட்டும் அப்படி எனக்குக் கல்யாணமே ஆகவில்லை என்றாலும் குற்றமில்லை. இப்படியே நான் இருந்துவிட்டுப் போகிறேன்'' என்றாள். இப்படி எல்லோரும் கூறவே, வேண்டா விருப்பாக மூத்தவளை விட்டு விட்டு அடுத்தவளுக்கு வரன் தேடுவது என்ற முடிவுக்கு-நாகலிங்கம் பிள்ளை வந்து போன ஒரு வாரத்துக்குப் பிறகு - வந்தார்!

• • •

ஒரு நாள் நாகலிங்கம் பிள்ளை தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தபோது எதிர்ப் பட்டார் ஐயாறப்ப பிள்ளை.

ஐயாறப்ப பிள்ளை பெரிய மிராசுதார் தஞ்சை ஜில்லாவில். அதைத் தவிர அவருக்கு மணி மணியான மூன்று பிள்ளைகள். அவர்களில் மூத்தவன் அமிர்தலிங்கம், அமெரிக்காவில் ஒரு விஞ்ஞானக் கூடத்தில் ஆராய்ச்சியாளராகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறான். அவன் ஒரு வாரத்தில் அமெரிக்காவிலிருந்து வருகிறான். ஒரு மாத விடுமுறையில், அவனுக்கு வயது முப்பத்திரண்டு ஆகிறது. அவன் வந்த பத்துப் பதினைந்து நாட்களில் கல்யாணம் நடத்தி வைத்து அவனும் அவன் மனைவியும் இனிமையாக இல்லறம் நடத்துவதைத் தன் கண்ணால் பத்து நாளாகிலும் பார்க்க வேண்டும். பிறகு அவன் மனைவியை அழைத்துக் கொண்டு அமெரிக்காவுக்குப் புறப்பட்டுவிடுவான். ஆகவே, அவன் வந்ததும் கல்யாணம் நடத்தும்படியாக அவனுக்கு ஏற்ற பெண் இருந்தால் சொல்லுமாறு கேட்டார் ஐயாறப்ப பிள்ளை.

''ஐயாவின் அந்தஸ்துக்குத் தகுந்த சம்பந்தம் தஞ்சாவூர் ஜில்லாவிலே எங்கே அமையப் போகிறது! திருநெல்வேலி ஜில்லாவிலே



பார்க்கலாம். விசாரித்துச் சொல்றேனுங்க!'' என்றார் நாகலிங்கம்.

''அந்தஸ்தாவது ஒண்ணாவது! இந்த நாடு போகிற போக்கிலே நேற்று வரை அந்தஸ்தோடு இருந்தவன் இன்று ஆலாப் பறக்கிறான். நேற்றுவரை அன்னக் காவடியாக இருந்தவன், அஞ்சு மாடி கட்டி அமோகமாக இருக்கான்! மகன் ஒரு வாரத்தில் வரான். அதற்குள் ஏழை வீட்டுப் பெண்ணானாலும் பி.ஏ.வரை படித்து, மூக்கும் முழியுமாக இருந்தால் போதும். நானே செலவழித்துப் பண்ணிக்கிறேன்'' என்றார் ஐயாறப்பர்.

''நம்ம சங்கரன் பிள்ளையின் இரண்டாவது மகள் மரகதம் பி.ஏ. பாஸ் செய்து பாங்கில் வேலையிலிருக்கிறாள். லட்சணமாக இருப்பாள். பார்க்கலாம்'' என்றார் நாகலிங்கம்.



# மனப்பொருத்தம்

எஸ்.வி.எஸ்



''மூத்தவளுக்குக் கல்யாணம் ஆயிட்டதா? எங்கே கொடுத்திருக்கார்?''

''மூத்தவளுக்குக் கால் சற்று ஊனம். இளம்பிள்ளை வாதம். அதனால் அவளுக்குத் தகையவில்லை. அதனால் அவளை விட்டு விட்டு அடுத்தவளுக்குக் கல்யாணம் பண்ணி விடறதாக இருக்கேன் என்று நேற்றுத்தான் சங்கரன் பிள்ளை கூறினார்'' என்றார் நாக லிங்கம்.

''அவரே அந்த முடிவுக்கு வந்துவிட்டார் என்றால் நாம் என்ன சொல்ல இருக்கிறது! இரண்டாவது பெண் ஜாதகம்தான் வாங்கிக் கொடும் பார்ப்போம்!'' என்றார் ஐயாறப்ப பிள்ளை.

**ச**ங்கரன் பிள்ளை வீட்டில் ஒரே கொண்டாட்டம்!

ஒரு பக்கம் அளவு கடந்த சந்தோஷம். மற்றொரு பக்கம் இந்த அளவு கடந்த



சந்தோஷம் நீடிக்க வேண்டுமே என்ற கவலை. பெண் பிடிக்கவில்லை என்ற ஏமாற்ற வார்த்தை வராமலிருக்க வேண்டுமே என்ற ஏக்கமாக இருந்தது.

எடுத்த எடுப்பிலேயே முதன் முதலாகத் தன்னைப் பார்க்க வரும் இளைஞன் அமெரிக்க விஞ்ஞானி என்றால் எந்தப் பெண்ணுக்குத் தான் மகிழ்ச்சியாக இராது?

விதிப்படி பெண் பார்க்கும் படலம் முடிந்தது.

பிள்ளை வீட்டார் போகும்போது, ஐயாறப்ப பிள்ளை, ''நாகலிங்கம் பிள்ளையிடம் சொல்லியனுப்புகிறேன்'' என்று சொல்லி விட்டுப் போனார்.

**''ச**ங்கரன் பிள்ளை! உம்ம அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் ஐயா!'' என்று அட்டகாசமாகக் கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தார் நாக லிங்கம் பிள்ளை.

''பையனுக்குப் பெண் பிடித்துவிட்டதாமா?'' என்று பரபரப்புடன் கேட்டார் சங்கரன் பிள்ளை.

''அதில்லையா! மூத்தவளை விட்டு விட்டு அடுத்தவளுக்கு எப்படிப் பண்ணுவது என்பீரே! இந்த மாப்பிள்ளை என்ன சொல்லி விட்டான் தெரியுமா? — உம்ம மூத்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறேன் என்று சொல்லிவிட்டான்.!'' என்றார்.

''என்ன!'' என்று ஏககாலத்தில் பல திசையிலிருந்து குரல் வந்தது.

'''ஆமாம்; அந்தப் பெண்ணுக்குக் கால் ஊனமாச்சே' என்று ஐயாறப்ப பிள்ளை சொன்னார். அதற்குப் பையன் என்ன சொன்னான் தெரியுமா? 'பார்த்தேன். கால்தான் ஊனமே யொழிய மனசு ஊனமில்லை' என்று சொல்லி விட்டான். தகப்பனார் 'ஜாதகப் பொருத்தம் பார்க்கவில்லையே' என்றார். ஜாதகப் பொருத்தத்தை விட, மனப் பொருத்தம் முக்கியம்



எல்லா கொசுக்களும் கடிப்பதில்லை; பெண் கொசுக்கள் மட்டுமே கடிக்கின்றன. பெண் கொசுக்கள் பெண்களைத் தான் அதிகம் கடிக்கின்றன. காரணம் அவர்களுடைய சருமம் மென்மையாக இருப்பது தான். -பிரியா பாலு

என்று நம் சாஸ்திரத்திலேயே சொல்லியிருக்கு. அதனால் நான் கல்யாணம் பண்ணிக்கொள்வதானால் அந்த மூத்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கிறேன். உங்களுக்கு இஷ்டமில்லையேல் கல்யாணம் பண்ணிக்காமலே திரும்பிப் போகிறேன்!' என்று கூறிவிட்டான்!'' என்றார் நாகலிங்கம்.

ஐயாறப்ப பிள்ளையின் மூத்த மகன் அமிர்தலிங்கத்துக்கும் சங்கரன் பிள்ளையின் மூத்த மகள் திலகவதிக்கும் ஒரு நல்ல நாளில் நல்லோரையில் திருமணம் நடைபெற்றது. பதினைந்தாவது நாள் இருவரும் அமெரிக்காவுக்குப் பயணமாயினர்.

• • •

கோமதி அம்மாள், பெண்களுக்கே இயல்பான சுபாவப்படி, ''மூத்த மகள் கல்யாணம் நடந்த மகிழ்ச்சியிலேயே மூழ்கிக் கிடந்தது போதும். வரிசையாக இன்னும் மூன்று பெண்கள் கல்யாணத்துக்கு நிற்கின்றன, என்பது ஞாபகம் இல்லை போலிருக்கிறது. மரகதத்தின் ஜாதகத்தை எடுத்துக்கொண்டு புறப்படுங்கள்!'' என்றாள்.

இவர்கள் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த இரண்டாவது மகள் மரகதம் ''அப்பா, இனி என் ஜாதகம் எடுத்துக் கொண்டு போக வேண்டிய அவசியமில்லையப்பா! என் தங்கை காமாட்சியின் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு போங்கள்!'' என்றாள்.

''நீ என்னம்மா சொல்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டார் தந்தை.

''அன்று அத்தான் சொன்னாரே ஜாதகப் பொருத்தங்களுக்கும் மேலே மனப் பொருத்தம் என்று. எந்த வரனுடன் என் ஜாதகப் பொருத்தம் ஏற்பட்டாலும் என் மனப் பொருத்தம் ஏற்படாது அப்பா!'' என்றாள் மரகதம்.

அவள் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர்த் துளிகள் தரையில் விழுந்து தெறித்தன. கண்களைத் துடைத்த வண்ணம் அறைக்குள் திரும்பிச் சென்றாள்.

---

## நட்சத்திர வடிவம்

## பரிசுத்திட்டம்-8



ஏ. வி. ரமணனின் முழு உருவத்தையும் சரியானபடி ஒட்டி அனுப்பியவர் ஒருவர் மட்டுமே.

என். கே. தேவராஜன், 31, மாரியம்மன் கோயில் தெரு, காவல் நிலையம் பின்புறம், நாட்டறாம்பள்ளி (வ.ஆ.) 635 852.

மிஞ்சும் தொகை ரூ. 225.

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள தொகை ரூ. 1525.

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப்படங்கள் 61.

## போட்டி முடிவு



# அரசியல் ஒலிம்பிக்ஸ்!

ஆப்கானிஸ்தானின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட்டுத் தங்களது துருப்புக்களைக் கொண்டு ரஷ்ய அரசாங்கம் ஆப்கானிஸ்தானில் ராணுவ ஆக்கிரமிப்புச் செய்திருப்பதால், மாஸ்கோவில் நடக்கவிருக்கும் ஒலிம்பிக்கில் அமெரிக்கா பங்கேற்காது என்று அமெரிக்கா விலகிக் கொண்டதையொட்டி ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, பாகிஸ்தான் போன்ற பல முக்கிய நாடுகளும் மாஸ்கோ ஒலிம்பிக்ஸ் விளையாட்டுக்களைப் பகிஷ்காரம் செய்துள்ளன.

சென்ற 40 ஆண்டுகளில் அரசியல் நுழையாத ஒலிம்பிக்ஸ் விளையாட்டுக்கள் நடந்ததாகத் தெரியவில்லை.

1936ம் ஆண்டு பெர்லினில் நடந்த ஒலிம்பிக்கை நாஜி ஒலிம்பிக்ஸ் (Nazi Olympics) என்றே கூறலாம். அப்போட்டியில் பங்கேற்கும் யூதர்களுக்கு ஜெர்மன் சட்டப்படி பாதுகாப்பு உரிமைகள் அளிக்கப்படமாட்டாது என்று அறிவித்த ஹிட்லர், பெர்லின் ஒலிம்பிக்கை ஆரியர்களின் மேன்மையைக் காட்டவும், யூதர்களை விமர்சனம் செய்யவுமே உபயோகித்தார். ஹிட்லருக்குப் பணிந்து அமெரிக்கா தனது ஒலிம்பிக் குழுவிலிருந்து இரண்டு யூத ஓட்டக்காரர்களை விலக்கியது. ஆனால் ஜெஸ்ஸி ஓவன் என்ற யூதஓட்டக்காரர் நான்கு தங்க மெடல்களை வென்று யூதப் பெருமையை வெளிப்படுத்தினார்.

அரேபியா, இஸ்ரேல் ஆகிய நாடுகளுக்கிடையே இருந்த பகையால் 1948ம் ஆண்டு லண்டனில் நடந்த ஒலிம்பிக்கிற்கு இரண்டு நாடுகளுமே அழைக்கப்படவில்லை.

1912ம் ஆண்டு ஒலிம்பிக்கில் பங்கேற்ற பிறகு, 1952ம் ஆண்டு ஹெல்சிங்கியில் நடந்த ஒலிம்பிக்கில்தான் ரஷ்யா பங்கேற்றது. 1952ம் ஆண்டு ஒலிம்பிக்கிற்கு கம்யூனிஸ்ட் சீனு அழைக்கப்பட்டதால் தேசிய சீனு இப்போட்டியினின்றுவிலகிக் கொண்டது. கடைசியில் கம்யூனிஸ்ட் சைனுவும் சரியான நேரத்துக்கு வர முடியாமல் பங்கேற்க முடியாமல் போய்விட்டது.

1956ம் ஆண்டு ஆஸ்திரேலியா, மெல்பர்னில் நடந்த ஒலிம்பிக் 'சூயஸ் ஒலிம்பிக்' என்று கூறப்பட்டது. ஆங்கிலேய, பிரெஞ்சு அரசுகள் சூயஸ் கால்வாயை ஆக்கிரமிப்புச் செய்தன என்று எகிப்து, லெபனுன் போன்ற நாடுகள் இப்போட்டிகளைப் பகிஷ்காரம் செய்தன. ஹங்கேரியை ரஷ்யா ஆக்கிரமிப்புச் செய்துள்ளது என்று ஸ்பெய்ன், ஸ்விட்ஜர்லாந்து, நெதர்லாந்து ஆகிய நாடுகளும் மெல்பர்ன் ஒலிம்பிக்கைப் பகிஷ்கரித்தன.

தேசிய சைனுவுக்கு அழைப்பு அளிக்கப்பட்டதை எதிர்த்து இந்தத் தடவை கம்யூனிஸ்ட் சைனு பகிஷ்கரித்தது. அர்ஜண்டைனு ஒலிம்பிக் கமிட்டித் தலைவரை அந்நாட்டு ராணுவ அரசு கைது செய்து காவலில் வைத்ததை எதிர்த்து, அர்ஜண்டைனுவை ஒலிம்பிக் குழு விலக்கி வைத்தது.

ரஷ்யர்களுக்கும் ஹங்கேரி நாட்டினருக்கும் இடையே இருந்த பகையில் ஹங்கேரிநாட்டுத் தண்ணீர் போலோ குழு ரஷ்யாவை வெல்லும் நிலையில் இருந்தபோது ரஷ்ய விளையாட்டு வீரரால் எர்வின் சடார் என்ற ஹங்கேரிய வீரர் தாக்கப்பட்டுத் தண்ணீரில் ரத்தம் ஓடியது. விளையாட்டைப் பாதியில் நிறுத்திவிட்டு ஹங்கேரி வென்றதாக நடுவர் அறிவித்தார். தொடர்ந்து ஏகப்பட்ட ரகளை.

1964ல் டோக்கியோ ஒலிம்பிக்கில் ஆரம்பத்தில் தென் அமெரிக்கா பங்கேற்க அனு

ஒருவர் உங்கள் மனத்தைப் புண்படுத்தி விட்டால், முகத்தை நீட்டிக் கொண்டு மூலையில் உட்கார்ந்து விடாதீர்கள். ஏதாவது செய்யுங்கள். கையில் காயம் ஏற்பட்டால் என்ன செய்வீர்களோ, அதை உடனே செய்யுங்கள். அதாவது புண்ணுக்கு மருந்து போடுங்கள் இல்லாவிட்டால் நிலைமை கட்டு மீறிப் போய் விடும். உங்கள் மனத்தைக் காயப் படுத்திய வரை மன்னித்து அவரது நலனுக்காகப் பிரார்த்தனை செய்வதே, உங்கள் புண்ணை ஆற்றக்கூடிய மருந்து. வன்ம உணர்ச்சி வடியும் வரை விடாது பிரார்த்தனை செய்யுங்கள்.

— நார்மன் வின்சென்ட் பீல்
- பிரியா பாலு

மதிக்கப்பட்டதை எதிர்த்து எல்லா ஆப்பிரிக்க நாடுகளும், மூன்றும் உலக நாடுகளும் எதிர்ப்பைத் தெரிவிக்கவும் நிறவெறி கொண்ட தென் ஆப்பிரிக்கா விலக்கப்பட்டது.

1968ல் மெக்ஸிகோ ஒலிம்பிக்கிலும் இம்மாதிரியே தென் அமெரிக்கா ஒதுக்கப்பட்டது. டாமி ஸ்மித், ஜான் கார்லோஸ் என்ற கருப்பர் ஓட்டப் பந்தய வீரர்கள் வென்று, வெற்றி மேடையில் நின்று கருப்பர் பெருமையைக் காட்டும் விதமாக Black power Salute செய்தனர்.

1972ம் ஆண்டு மியூனிக் ஒலிம்பிக் கிராமத்தில் இஸ்ரேலிய விளையாட்டு வீரர்களைச் சிறை வைத்த பாலஸ்தீனக் கொரில்லாக்களைச் சேர்ந்த 'கருப்பு செப்டம்பர்' என்கிற படை சிறை வைத்தவர்களில் பதினொரு இஸ்ரேல் விளையாட்டுக்காரர்களைக் குரூரமாகக் கொன்றது.

1976ம் ஆண்டு மாண்ட்ரீலில் நடந்த ஒலிம்பிக்கின்போது நியூஸிலாந்து மேற்கு ஆப்பிரிக்க அணியுடன் ரக்பி விளையாட்டில் பங்கேற்றது என்று காரணம் காட்டி 28 ஆப்பிரிக்க நாடுகள் பகிஷ்காரம் செய்தன. தேசிய சைனா, கம்யூனிஸ்ட் சைனா தகராறு இங்கும் தொடர்ந்தது.

ஆப்கானிஸ்தானில் ரஷ்யா வைத்துள்ள ராணுவத்தை அது விலக்கிக் கொள்ளாததனால் பகிஷ்காரம் செய்வதாகக் கூறி 1980 மாஸ்கோ ஒலிம்பிக் விளையாட்டுக்களை அமெரிக்கா, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா போன்ற பல நாடுகள் பகிஷ்கரித்துள்ளன.

அமெரிக்காவின் பகிஷ்கரிப்புக்குப் பதிலடியாக 1984ல் லாஸ் ஏஞ்ஜல்ஸில் நடக்கவிருக்கும் ஒலிம்பிக் விளையாட்டுக்களின் போது ரஷ்யா எதிர் நடவடிக்கைகள் எடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதனால் நிரந்தரமாக ஒலிம்பிக் விளையாட்டுக்களை முதல் ஒலிம்பிக் நடந்த இடமான கிரீஸ் நாட்டிலேயோ அல்லது புதிதாக ஓர் ஒலிம்பிக் கிராமம் கட்டி அங்கேயே எப்போதும் நடத்தலாம் என்கிற யோசனைக்குப்பெருத்த ஆதரவு உள்ளது!

— நாயகன்





# திரும்பிப்பார்

- ஒலிம்பிக் விளையாட்டு கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு இருந்தே நடைபெற்று வந்துள்ளது.
- முதன் முதலில் கி.மு. 1370ம் ஆண்டில் கிரீஸ் நாட்டை ஆண்ட Aethlious மன்னனின் மகன் ஒலிம்பிக் விளையாட்டுக்களைத் தொடங்கி வைத்தான். கடவுளுக்கு இளம் பாலகனைப் பலி கொடுத்து விளையாட்டுக்களைத் தொடங்கினார்கள்.
- கிறிஸ்து பிறந்து 67 ஆண்டுகள் கழித்து ரோமாபுரியை ஆண்ட மன்னன் நீரோ ஒலிம்பிக் விளையாட்டுக்களை நடத்தி வைத்தான். திறந்த வெளியில் சிங்கத்துடன் சண்டை போடும் விளையாட்டு பத்துக்குதிரைகளைப் பூட்டிய ரதப் பந்தயம், இன்னும் சில விளையாட்டுக்களை நடத்தினான். விளையாட்டுக்காக அரங்கம் கட்டினான். நீரோ மன்னனே நீதிபதியாக இருந்து விளையாட்டுக்களில் வெற்றியடைந்தவர்களுக்குத் தங்க நாணயங்களை அன்பளிப்பாக அளித்தான்.
- பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ''இன்றைய ஒலிம்பிக்கின் தந்தை'' என அழைக்கப்படுகிற பேரன் டி கௌபெர்டின் என்பவர் 1892ம் ஆண்டில் ஒலிம்பிக் பற்றி அறிக்கை விடுத்தார். நிதி சேர்க்கவும் ஆரம்பித்தார்.
- கிரீஸ் நாட்டில் ஏதென்ஸ் நகரத்தில் 1896ம் ஆண்டில், சுமார் 80,000 மக்கள் முன்னிலையில் முதலாவது ஒலிம்பிக் விளையாட்டு ஆரம்பம் ஆனது. கிரீஸ் அரசாங்கம் முதன் முதலாக ஒலிம்பிக் விளையாட்டை முன்னிட்டு விசேஷத் தபால் தலை வெளியிட்டது.
- 1897ம் ஆண்டில் சர்வதேச ஒலிம்பிக் கமிட்டி அமைக்கப்பட்டது.
- 1904 ஆண்டில் அமெரிக்காவில் செயிண்ட் லூயி நகரத்தில் மூன்றாவது ஒலிம்பிக் விளையாட்டு நடைபெற்றது. அப்போது நடந்த உலகக் கண்காட்சியில் ஒரு பகுதியில் ஒலிம்பிக் நடந்தது. ஏற்பட்ட செலவை ஏழு ஐரோப்பிய நாடுகளும் வேறு ஐந்து நாடுகளும் பங்கு போட்டுக் கொண்டன.
- 1908ம் ஆண்டில் நான்காவது உலக ஒலிம்பிக் விளையாட்டு லண்டன் நகரத்தில் நடைபெற்றது. இந்த ஆண்டில்தான் பந்தயங்களில் முதல் பரிசாகத் தங்கப் பதக்கம் அளிக்கும் வழக்கம் ஏற்பட்டது.
- 1912ம் ஆண்டில் ஐந்தாவது உலக ஒலிம்பிக் விளையாட்டு ஸ்வீடன் நாட்டில் ஸ்டாக்ஹோம் நகரத்தில் நடைபெற்றது. இந்த ஆண்டில்தான் முதன் முதலாக நீச்சல் போட்டியில் பெண்கள் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர்.
- 1916ம் ஆண்டில் ஆறாவது உலக ஒலிம்பிக் பெர்லின் நகரத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். ஆனால் 1914ல் ஜெர்மனி போர்ப் பிரகடனம் செய்தது. உலக யுத்தம் காரணமாக ஒலிம்பிக் பிறந்த நாடான ஏதென்ஸ்















நகரத்தில் எவ்வித ஆடம்பரமும் இல்லாமல் இவ்விளையாட்டு நடந்தது.

- 1940ம் ஆண்டில் உலக ஒலிம்பிக் ஜப்பான் நாட்டில் டோக்கியோ நகரத்தில் நடைபெற விருந்தது. ஆனால் ஜப்பானும் சைனாவும் போரில் ஈடுபட்டதால் ஃபின்லந்து தேசத்தில் ஹெல்ஸிங்கி நகரத்தில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் ஃபின்லந்து நாடும் உலகப் போரில் ஈடுபட்டதால் 1940ல் ஒலிம்பிக் நடைபெறவில்லை.
- 1920ம் ஆண்டில் 7வது உலக ஒலிம்பிக் விளையாட்டு பெல்ஜியம் நாட்டில் நடைபெற்றது. இந்த ஆண்டில்தான் முதன் முதலாக கௌபர்டின் வரைந்த ஐந்து வளையங்கள் கொண்ட ஒலிம்பிக் கொடி பறக்கவிடப்பட்டது. இந்த ஆண்டில்தான் அமெரிக்காவைச் சேர்ந்த 13 வயதான ரிக்கின் என்ற பெண் நட்சத்திரம் ஸ்பிரிங் போர்டு பந்தயத்தில் வெற்றி கண்டு தங்க மெடலைப் பெற்றுள்.
- 1924ம் ஆண்டில் எட்டாவது உலக ஒலிம்பிக் விளையாட்டு பாரிஸ் நகரத்தில் நடை.பெற்றது. இந்த ஆண்டில்தான் பெண்கள் முதன் முதலாக கத்திச் சண்டைப் போட்டியில் ஈடுபட்டார்கள்.
- 1928ம் ஆண்டில் ஒன்பதாவது உலக ஒலிம்பிச் விளையாட்டு ஹாலந்து நாட்டில் ஆம்ஸ்டர்டாம் நகரத்தில் நடைபெற்றது இந்த ஆண்டில்தான் முதன் முதலாக இந்திய விளையாட்டு வீரர்கள் ஹாக்கி போட்டியில் கலந்துகொண்டு வெற்றி பெற்று உலக சாம்பியன் பட்டத்தைப் பெற்றூர்கள்.
- 1932ம் ஆண்டில் 10வது உலக ஒலிம்பிக் விளையாட்டு அமெரிக்காவில் லாஸ் ஏஞ்ஜலெஸ் நகரத்தில் நடைபெற்றது. இந்த ஆண்டில்தான் ஒலிம்பி க்விளையாட்டுக்காகத் தனியாகஒலிம்பிக் கிராமம்அமைக்கப்பட்டது.
- கி. பி. 1936ம் ஆண்டில் 11வது சர்வ தேச ஒலிம்பிக் விளையாட்டு பெர்லின் நகரத்தில் நடைபெற்றது. இந்த ஆண்டில்தான் முதன் முதலாக ஒலிம்பிக் பிறந்த இடமான ஏதென்ஸ் நகரத்திலிருந்து ''ஒலிம்பிக் ஒளி-தீப்பந்தம்'' ஐரோப்பிய நாடுகள் வழியாகக் கைமாறி கைமாறிக் கொண்டு செல்லப்பட்டு ஒலிம்பிக் ஸ்டேடியத்தில் ஏற்றப்பட்டது.
- 1960ம் ஆண்டில் 17வது ஒலிம்பிக் ரோமில் நடந்தது. பிரபல குத்துச் சண்டை சாம்பியன் காஷியஸ் கிளே (பின்னுல் முகம்மது அலி) முதன் முதலாகக் குத்துச் சண்டை போட்டியில் பங்கு கொண்டு வெற்றி பெற்று தங்க மெடலை அடைந்தார். அப்போது அவர் வயது 18தான்!
- 1968ம் ஆண்டில் ஒலிம்பிக் மெக்ஸிகோ நகரத்தில் நடைபெற்றது. இந்த ஆண்டில் முதன் முதலாக ஒலிம்பிக் தீப்பந்தத்தைப் பெண்கள் எடுத்துச் சென்றனர். இந்த ஆண்டில் அமெரிக்காவைச் சேர்ந்த நீக்ரோக்கள் பந்தயங்களில் கலந்துகொண்டு பல பதக்கங்களைப் பெற்று அமெரிக்காவுக்குப் புகழ் தேடித் தந்தனர்.

—தொகுப்பு: **மூர்த்தி**





# கடுகு பதில்கள்!




✠ மங்களதேவன், சென்னை-17

கே. கடுகு, அரசு, மணிவண்ணன், தமிழன் பராசக்தி இவர்கள் பதில்களில் தங்களைக் கவர்ந்தது எது?

ப: ரொம்ப சுலபமான கேள்வி. விடை மூன்றெழுத்துக்காரருடையது.

✠ குமாரி எஸ். ராஜேஸ்வரி, சென்னை-33

கே. பெண்களும் போட்டியாக வருவதால்தான் எங்களுக்கு வேலை கிடைப்பதில்லை என்று ஆண்கள் குற்றம் சாட்டுகின்றனரே, சரியா?

ப: தவறு, தவறு. 'வகுப்பில் எல்லாரும் 70, 80 மார்க் வாங்கிவிடுவதால் 30 மார்க் வாங்கிய எனக்கு முதல் ரேங்க் கிடைக்கவில்லை' என்பது போன்ற அபத்தமான குற்றச்சாட்டு இது.

✠ கனகவல்லி, திருச்சி-1

கே. எழுத்தாளர் லக்ஷ்மி ஒரு டாக்டரா? தபால் எழுதினால் பதில் எழுதுவாரா? விலாசம்?

ப: நீங்கள் எந்த ஊரில் இருக்கிறீர்கள்? லக்ஷ்மி அவர்கள் ஒரு டாக்டரும் கூட. திருமதி லக்ஷ்மி மேற்பார்வை, ஏதாவது தமிழ்ப் பத்திரிகை என்ற விலாசத்துக்கு எழுதுங்கள்.

✠ அனிதா ராமச்சந்திரன், பெங்களூர்-8

கே. அல்லினி இதழில் கமலஹாசன் கதை படித்தீர்களா?

ப: நடை நன்றாக இருந்தது. கதை ஒரு ஹோமோ செக்ஷுவலைப் பற்றி இருந்தும் நாகரிகமாக எழுதியிருக்கிறார். கதை முடிவைப் பற்றி நேரில் சந்திக்கும்போதுதான் கேட்க வேண்டும்! அதாவது சந்திக்க முடிந்தால்.

✠ வி. ஸ்ரீதரன், சென்னை-15

கே. "பசு மட்டும் தான் பால் கொடுக்கிறதா? நானும் தான் பால் தருகிறேன். இருந்தும் பசுவைத் தெய்வமாகப் போற்றும் நீங்கள் என்னை இகழ்வதேன்?" என்று ஒரு எருமை கேட்கிறது. உங்கள் பதில்?

ப: 'பால் தருவதால் அதைத் தெய்வமாகப் போற்றவில்லை. அது பசுவாக இருப்பதால் தான் போற்றுகிறோம்' என்று எருமைக்குப் பதில் சொல்லுங்கள் (எனக்கு எருமை மொழி தெரியாது!)

✠ கோ. ராஜகோபால சீனிவாசன், மதுரை-16

கே. நாத்திகர்கள் கடவுளின் பகைவர்கள் அல்ல. கடவுளுடன் போட்டி போட்டுக்கொண்டு ஜெயித்தவர்கள் என்று ஒரு நாவலாசிரியர் கூறியிருக்கிறாரே! கடவுளுடன் எப்படிப் போட்டியிட்டு ஜெயிக்க முடியும்?

ப: அவர் சொன்னதற்கு என்னை ஏன் போட்டுக் குடைகிறீர்கள்? என்னை விட்டுடுங்கோ ஸ்வாமி. சாஷ்டாங்கமாக விழுந்து சேவிச்சுடறேன்!

✠ ஏ. சங்கரன், சங்கரன் கோயில்

கே. சுதா மணிமேகலை ஒரு ஆண் என்று தெரிந்தவுடன், 'ஏமாற்றம்' என்றீர்களே இதில் என்ன ஏமாற்றம் ஏற்பட்டுவிட்டது?

ப: அதுவா... அது வந்து... சும்மா ஒரு இதுதான். அதனால்தான் ஏமாற்றம்.

✠ டி. எஸ். ரெட்டி, வேலிடுபட்டி

கே. ஸிதாரீப் பிரசாத் அவர்களின் பேச்சாற்றலைப் பற்றி?

ப: பாராட்டக் கூடியது. சரளமாகப் பேசுகிறார். ஆனால் தமிழில் பேசும்போது நடுநடுவே இவ்வளவு ஆங்கிலம் நுழைக்க வேண்டுமா என்பது கேள்வி. தனது ஆங்கிலப் புலமையைக் காட்ட முயல்வதாகத் தான் படுகிறது.

✠ கபிலதாசன், விருத்தாசலம்

கே. எனது நண்பர் பத்திரிகைகளில் கேள்வி கேட்பது முட்டாள்களின் செயல் என்கிறார்?

ப: உங்களிடம்தானே சொன்னார்? 'ஒரு சோறு பதம்' என்ற அடிப்படையில் கூறியிருக்கலாம்!

✠ வி. என். எஸ். ராமன், செல்லிஸ்

கே. எதைக் கண்டு வியப்பு ஏற்பட்டது?

ப: சமீபத்தில் பில்லா படத்தைப் பார்த்தேன். குழப்பமில்லாத கதையோ, பிரமாதமான வசனமோ, சிறப்பான நடிப்போ (மை நேம் இஸ் பில்லா பாடலைத் தவிர) நல்ல பாட்டோ இல்லாத இந்தப் படம் எப்படி நூறு நாட்களுக்கு மேல் ஓடிக் கொண்டிருக்கிறது என்று வியப்பு ஏற்பட்டது.

பரிசு பெறுபவர் :

எஸ். ராஜேஸ்வரி
6, அண்ணா வீதி
எதிராஜ் நகர், சென்னை-33





**டாக்டர் ராஜன்:** அரசியல் வேறு விளையாட்டுக்கள் வேறு. இதையும் அதையும் ஒன்று சேர்ப்பது மிகத் தவறு. விளையாட்டுக்களே உலக சமாதானத்துக்காகத்தான் நடத்தப்படுவது. பல்வேறு நாட்டவர் பல மொழி இனத்தவர் ஆகிய எல்லோரும் ஒன்றாக இணைந்து மகிழ்வதற்காகத்தான் விளையாட்டே உருவானது. இதை ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறார்களோ தெரியவில்லை. ஆப்கானிஸ்தானில் ரஷ்யா நுழைந்தது சரி தவறு என்ற விவாதத்துக்கு நாம் போக வேண்டாம். ஆனால் ஒன்றை மட்டும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். விளையாட்டு எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டது. அது மனித அறிவுக்கும் சக்திக்கும் நன்மை செய்வது. காரணங்கள் எதுவாக இருந்தாலும் உலகின் மிகப் பெரிய விளையாட்டு விழாவைப் பகிஷ்கரிப்பது எனக்குச் சரியாகப் படவில்லை.



**குமாரி அபிதா:** மனித உயிர் உலகில் உள்ள எல்லாவற்றையும் விட மிக மிக முக்கியமானது. அதை எடுத்துக் கொள்ள யாருக்குமே உரிமை கிடையாது. போர் என்பதே உயிர்களைக் கேள்வி முறையே இல்லாமல் அழிப்பதுதானே! அப்படி ஒரு நாட்டினுள் நுழைந்து கொண்டு ஒருபுறம் சண்டையும், மறுபுறம் சமாதானத்துக்காக ஒலிம்பிக் போட்டிகளை நடத்துவதும் எந்த விதத்தில் நியாயம்? அப்படி இருக்கையில் விளையாட்டில் அரசியல் நுழையக் கூடாது என்று பலர் கூறலாம். இது அரசியலே அல்ல. மனித உயிரின் பிரச்னை.



**கே. வெங்கட்ராமன்:** ஒலிம்பிக் சின்னத்தில் ஐந்து வட்டங்கள் இருக்கின்றன. அவை ஐந்து கண்டங்களையும் அந்த வட்டத்தைச் சுற்றி இருக்கும் பல்வேறு வண்ணங்கள் பல நாட்டுக் கொடிகளின் வண்ணங்களையும் கொண்டதாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இப்படி ஒன்றை அமைத்தார்கள். சமாதானம், நீதி, இவைகளெல்லாம் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகத்தான் ஒலிம்பிக் பந்தயங்களே உருவாயின. அப்படிச் சண்டையிடாமல் இருக்க வேண்டும் என்று உருவாக்கப்பட்ட பந்தயத்தை நடத்தும் ரஷ்யக்காரர்களே ஆப்கானிஸ்தானில் ஊடுருவி விட்டார்கள் என்று கேட்கும்பொழுது வருத்தமாகத்தான் இருக்கிறது. ஒலிம்பிக் போட்டியை நாம் பகிஷ்கரிப்பது மட்டுமல்லாமல் ஒலிம்பிக் போட்டி அங்கு நடக்கத்தான் வேண்டுமா என்று கேட்பதுதான் முறையானதுஎன்று நான் நினைக்கிறேன்.



**கே. சூரியநாராயணன்:** அமெரிக்காவும் அதன் பரிவு நாடுகளும் சேர்ந்து ஒலிம்பிக்கைப் பகிஷ்கரிக்க முன்வந்துள்ளன. லண்டன் ஒலிம்பிக்கில் ஜப்பான், ஜெர்மனி, ரஷ்யா பங்கேற்கவில்லை. 1976 மாண்டிரியால் ஒலிம்பிக்கில் டான்ஸேனியா பகிஷ்காரம் செய்தது. ஒலிம்பிக்கின் குறிக்கோளே விளையாட்டுக் கலைஞர்கள் அரசியலுக்கு அப்பாற்பட்டு, விளையாட்டுக் கலைஞர்களாகவே திகழ வேண்டும் என்பது. பிரிட்டனில் பிரதம மந்திரியின் வேண்டுகோளுக்கெதிராக பிரிட்டிஷ் ஒலிம்பிக் கழகம் விளையாட்டு வீரர்களை மாஸ்கோ ஒலிம்பிக்குக்கு அனுப்பியுள்ளது. விளையாட்டுக் கலைகளும், விளையாட்டுக் கலைஞர்களும் அரசியலுக்கு அப்பாற்பட்டவர்கள் என்பதை பிரிட்டன் நிரூபித்திருக்கிறது. ஒலிம்பிக் விளையாட்டு வீரர்களையும் ஒலிம்பிக் விளையாட்டுக்களையும் அரசியல் கைப்பொம்மையாக்கி விளையாடுவதுசரியாகாது.

பேட்டி: **சலன்**

# ஒலிம்பிக் பகிஷ்கரிப்பு: தேவையா?



## 15

ஜானகி கண்ணீர் உகுப்பதுதான் மிச்சமாயிருக்குமே ஒழிய பலன் ஒன்றும் இருக்காது. உமா, உஷா, அவர்கள் அண்ணு ரவி மூவரும் ஒருவருக்காக ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு தங்களுக்குத் திருமணம் வேண்டாம் என்று தியாகம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

''அவனுக்கு முன்னலே நான் போயிருக்கணும். போகாம உக்காந்துண்டிருக்கேனே'' என்று சதா புலம்பிக் கொண்டிருந்த பலராமன் கடைசியில் ஒரு நாள் போயே போய் விட்டார். இரண்டு மாதங்களுக்கு முன்பாக. மகன் செத்துத் தான் பிழைத்திருப்பது ஏதோ தானே மகனைக் கொன்றுவிட்டது போல் ஒரு குற்ற உணர்ச்சியை அவர் உள்ளத்தில் உண்டாக்கி அதுவே அவர் உள்ளத்தைக் குடைந்துக் குடைந்து அவரைப் படுக்கையில் தள்ளி விட்டது. சாவதற்கு முன்னர் மூன்று மாதங்கள் அவர் படுத்த படுக்கையாகத்தான் இருந்தார். அவரது வைத்தியச் செலவுகளுக்காகப் பணம் ஏகமாகச் செலவழிக்க வேண்டியிருந்தது. ராகவனின் பிராவிடண்ட் பண்டு, கிராசுவிடி முதலியவை மூலமாகக் கிடைத்த தொகையை ஒரு பைசாகூட அதிலிருந்து எடுக்காமல் அப்படியே பாங்கியில் ஃபிக்ஸட் டிபாஸிட்டாகப் போட்டுவைத்து விட்டான் ரவி. இரண்டு தங்கைகளின் கல்யாணத்தையும் விமரிசையாக, அம்மாவுக்குக் குறையில்லாமல் நடத்த வேண்டுமென்பதில் ரவி அக்கறையாக இருந்தான்.

ஜானகியின் உடல் நிலையும் அவ்வளவு ஒன்றும் திருப்திகரமாக இருக்கவில்லை. ஏதாவது ஒன்று மாற்றி ஒன்று அவளைப் படுத்திக் கொண்டே இருந்தது. ''நான் கண்ணை மூடறதுக்குள்ளே யாவது இவா மூணு பேரும் கல்யாணம் பண்ணிண்டு வீட்டுக்கு மாட்டுப் பெண் வந்து, பெண்களும் புருஷனோட சம்சாரம் பண்றதைப் பார்க்க எனக்குக் கொடுத்து வைச்சிருக்கோ இல்லையோ?'' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள்.

• • •

ராதாவின் சித்தியின் தம்பி நாகுவுக்குக் கல்யாணம் நடந்து இரண்டு மாதங்களாகி விட்டன.

கல்யாணம் நிச்சயமாயிற்று என்று தெரிந்ததுமே, சரோஜா தன் பெற்றோர்களுடன் சண்டை போட்டுக் கடிதம் எழுதினள்.

''எங்களை ஒரு வார்த்தை கேட்காமல் நீங்கள் எப்படி கல்யாணம் நிச்சயம் செய்தீர்கள்? என் மூத்தாள் பெண் ராதாவை நாகுவுக்குக் கொடுக்க வேண்டும் என்று நாங்கள் எவ்வளவு ஆசையாக இருந்தோம்? அவனும் தான் எப்படி இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதித்தான்? இங்கே வந்திருந்தபோது ராதாவிடம் தனக்கு ரொம்பவும் பிரியம் இருப்பதாகவும், தான் அவளையேதான் கல்யாணம் செய்துகொள்ள விரும்புவதாகவும் சொல்லி விட்டுப் போனனே?'' என்றெல்லாம் எழுதியிருந்தாள்.

அதற்கு அவள் பெற்றோர்களே பதில் எழுதியதும் அல்லாமல், நாகுவே எஸ்.டி.டி. கால் போட்டுத் தொலை பேசியில் சரோஜாவுடன் பேசினன். அவனுக்கும் ராதாவுக்கும் அவள் அறையில் நடந்த சம்பாஷணையையும் அவள் தன்னிடம் விடுத்த வேண்டுகோளையும், தான் ரகசியத்தைக் காப்பாற்ற வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்ததனுல் இவ்வளவு நாளாக இந்த விஷயத்தை வெளியிடவில்லை என்றும், இனிமேல் வெளியிடா விட்டால் சரோஜா தங்களையெல்லாம் தவருகப் புரிந்து



கொல்வாள் என்பதனால் வெளியே சொல்ல வேண்டியதாகப் போய் விட்டதாகவும் சொன்னான். ராதாவையும் தொலை பேசியில் கூப்பிட்டு ரகசியத்தை அம்பலப்படுத்தியதற்காகத் தன்னை மன்னிக்கும்படியும் கேட்டுக் கொண்டான்.

இது நடந்த அன்று குப்புசுவாமியும் சரோஜாவும் ராதாவிடம் கொஞ்சம் கடுமையாகவே நடந்து கொண்டார்கள். அவன் பிடிவாதம் முட்டாள்தனம் என்றும், ''ரவி, எவ்வளவு நாள் வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கலாம். அவன் ஆண்பிள்ளை. நீ அப்படி இருக்க முடியாது. அவனை மறந்துவிட்டு வேறு யாரையாவது பண்ணிக்கொள்'' என்றெல்லாம் சொன்னார்கள்.

குப்புசுவாமி ரவியையும் கூப்பிட்டு அவனிடம் பேசினார். அவர் சொல்வது நியாயம் என்பதை ரவி ஒப்புக் கொண்டான். ராதாவுக்குத் தன்னை மறந்துவிடும்படியும், வேறு யாரையாவது நல்ல வரனைப் பார்த்துமணந்து கொண்டு சுகமாக வாழ்க்கையை நடத்தும்படியும் புத்திமதி சொன்னான்.

''நீங்கள் என்னை விரும்பலேன்னு சொல்லிடுங்க. அப்புறம் நான் என்ன செய்யணும்கிறதை நான் முடிவு செஞ்சுக்கறேன்'' என்றாள் ராதா.

''அது எப்படி ராதா? என்னால் உன்னை மறக்க முடியுமா?'' என்று ரவி கேட்டான்.

'உங்களாலும் என்னை மறக்க முடியாது. என்னாலும் உங்களை மறக்க முடியாது. அப்படி இருக்கச்சே நான் வேறொருத்தரைக் கல்யாணம் பண்ணிண்டு உங்களையே நினைச்சுண்டிருக்கிறதும், வேறொருத்தரோட மனைவியான என்னையே நீங்க நினைச்சுண்டிருக்கிறதும் தப்பில்லையா?'' என்று ராதா கேட்டதும் ரவி வாயடைத்துப் போனான். அதன் பிறகு அவனிடம் ஒன்றும் பேசவில்லை அவன்.

''இன்னும் ஒரே ஒரு வருஷம் எனக்கு டயம் கொடுங்க சார். அதற்குள் எப்படியும் நான் இதற்கு ஒரு ஸொல்யூஷன் கண்டு பிடிச்சுடறேன்'' என்று குப்புசுவாமியிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

''என்னமோ பண்ணுங்க போங்க'' என்று குப்புசுவாமி சலித்துக் கொண்டார்.

● ● ●

**ர**வி, உமா, உஷா, ஜானகி, ராமு எல்லாரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

''உன்னைப் பார்த்தாத்தான்டா எனக்குப் பாவமா இருக்கு, ராமு. இப்படி தாடியும் மீசையும் வளர்த்துண்டு எவ்வளவு நாளைக்கு விரக்தியோட இருப்பே? உங்கம்மாவை நினைச்சுண்டா எனக்குப் பரிதாபமா இருக்கு'' என்றாள் ஜானகி.

''என்ன மாமி நீங்க? எங்க வீட்லே நான் ஒருத்தன்தான் இப்படி இருக்கேன். மத்தவாள்ளாம் கல்யாணம் கார்த்தி பண்ணிண்டு சந்தோஷமாத்தான் இருக்கா. உங்க வீட்லெ மூணு பேரும்னா இப்படி மூணு மூலைக்கு உட்கார்ந்துண்டு முக்கோணம் வரைஞ்சுண்டிருக்கா. அதை நினைச்சு வருத்தப்படாம என்னை நினைச்சு வருத்தப்படறேளே!'' என்றான் ராமு.

''எல்லாம் இந்தப் பொண்ணு உமாவாலெ. அவமட்டும் உன்னைப் பண்ணிக்கறதுக்குச் சம்மதிச்சா






எல்லாரோட ப்ராப்ளமும் சரியாயிடும்'' என்றாள் ஜானகி.

''மறுபடியும் ஆரம்பிச்சுட்டியா அம்மா'' என்று உமா சலித்துக் கொண்டாள்.

''ஆரம்பிக்காம என்னடி பண்றது? உன் மனசு, அந்த மனசோட சந்தோஷமோ நிம்மதியோ எதுவோ ஒண்ணு அதை நினைச்சிண்டுதானே கல்யாணம் வேண்டான்னு பிடிவாதம் பிடிக்கிறே? உன் பிடிவாதத்தினாலே எவ்வளவு பேர் வாழ்க்கை கசப்பாயிடுத்துனு நீ எண்ணிப் பார்த்தியா? ராமு, நான், ரவி, உஷா, ராதா, அவனோட அம்மா அப்பா. இவ்வளவு பேர் மனசையும் கஷ்டப்படுத்திண்டு உனக்கு உன் பிடிவாதத்தைச் சாதிக்கணுமா?''

''மாமி, உஷாவை மட்டும் சொல்லிட்டு அவ மனசுலே இருக்கிறவனை விட்டுட்டேளே?'' என்று சிரித்தான் ராமு.

''அதுவும் சரிதான். இவ்வளவு ஏமாத்தத்தையும் மனசுலே முழுங்கிண்டு உன்னாலே சிரிச்சுப் பேசக்கூட முடியறதேடா ராமு'' என்றான் ரவி.

''அதுக்காக என் மனசுக்குள்ளே எனக்கு எவ்வளவு வருத்தமோ, ஏமாத்தமோ இருந்தாலும் அது என்னோட. என் மனசுலே ஒரு வருத்தம் இருக்குங்கறதுக்காக மத்தவாளை யெல்லாம் வருத்தப்படச் செய்யறதுக்கு எனக்கு என்ன அதிகாரம் இருக்கு?'' என்று கூறி உமாவைக் குறிப்பாகப் பார்த்தான்.

உமாவுக்குச் 'சுருக்'கென்றது. தான் அவன் சொல்வது போலத் தன்னுடைய வருத்தத்தையே பெரிதாகக் கொண்டாடி மற்றவர்களையும் சோகத்தில் முழுக வைத்துவிட்டாளோ?

''அம்மா, என்னாலேதான் இவ்வளவும் கறதை நான் ஒத்துக்க மாட்டேன். அப்பா, அண்ணாவிடம் எதுக்காக ப்ராமிஸ் வாங்கிண்டார், எங்க ரெண்டு பேர் கல்யாணத்தைப் பண்ணிட்டு அப்புறம்தான் அவன் கல்யாணம் பண்ணிக்கணும்னு? அவனுக்குக் கல்யாணமாயிட்டா குடும்பத்துலெ அக்கறையில்லாமப் போயிடும், அவனுக்கு மனைவியா வர்றவ இந்தக் குடும்ப நலன்லெ அக்கறையில்லாதவளா அமைஞ்சுடலாம்கற எண்ணத்தினாலேதானே? அண்ணா அப்படிப் பட்டவனா? இல்லே, அவன் விரும்பற அந்த ராதாதான் அப்படிப்பட்டவளா? ரெண்டும் இல்லியே? அப்படியிருக்க அண்ணா இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறதுதான் சரியாப்படலே எனக்கு'' என்றாள் உமா. தான் ஒரு நல்ல, பலமான ஆர்குமெண்டைச் சொல்லிவிட்டதாக நினைத்தாள் அவள். ஜானகிக்கும் அப்படியே தோன்றியது.

''கேளு, நீயே கேளு அவனை'' என்றாள் தாயார்.

உமாவுக்குத் தாயாரின் பக்க பலம் கிடைத்துவிட்ட தெம்பில் அவள் மேலும் தொடர்ந்தாள்.

''ஆம்பிளைதான் சம்பாதிச்சுக் குடும்பத்தைக் காப்பாத்தணும்னு ஏதாவது தர்மமா, சட்டமா? நான் வேலைக்குப் போறேன். சம்பாதிக்கிறேன். இந்தக் குடும்பத்தைக் கடைசிவரையிலும் காப்பாத்தறேன். அண்ணாவும் உஷாவும் கல்யாணம் பண்ணிண்டு சௌக்கியமா யிருக்கட்டும்'' என்றாள்.

''ரொம்ப கெட்டிக்காரத்தனமாப் பேசிட்டதா நினைப்பா உமா?'' என்று ரவி கேட்டான்.

''அப்படி யெல்லாம் ஒண்ணும் இல்லே அண்ணா. தப்பா நினைச்சுக்காதே. எனக்கு மனசுலே பட்டதை நான் சொன்னேன்.''

''உனக்கு மனசுலே பட்டதை நீ சொன்னே நானும் எனக்கு மனசுலெ பட்டதைச் சொல்லிடறேன். அப்பாவுக்கு வாக்குக் கொடுத்ததுக்காக நான் இப்படிப் பிடிவாதம் பிடிக்கலே. எனக்கும் பொறுப்புணர்ச்சி இருக்கு. ரெண்டாவது, நான் இதை வெறும் 'எகனாமிக் இஷ்யூ'வாப் பார்க்கல்லெ. உனக்கு வேண்டாங்கற இல்லற இன்பம் எனக்கும் வேண்டாம்னுதான் என்னோட இந்தப் பிடிவாதம்.''

''நீ தப்பா நினைக்கிறே அண்ணா. எனக்கு இதுலேதான் மகிழ்ச்சி இருக்கு. ஒருத்தரைக் கல்யாணம் பண்ணிண்டு அவரோட வாழறதுலே இன்பம் இருக்கிறதா நான் நினைக்கலே, இப்படியே இருந்தாத்தான், பிரகாஷுக்கு நான் துரோகம் பண்ணலேங்கற அந்த எண்ணமே எனக்கு எல்லாத்தையும் விட மேலே.''

''தட்ஸ் ஆல் நான்ஸென்ஸ். நான் இதையெல்லாம் நம்பத் தயாராயில்லே'' என்றான் ரவி.

''உமாவுக்கு அப்ஜெக்ஷன் இல்லேன்னா, நீங்க எல்லாரும் ஒத்துண்டா நான் உமாவோட தனியா ரெண்டு வார்த்தை பேசலாமா?'' என்று ராமு திடீரென்று கேட்டதும், உமாவும் மற்றவர்களும் ஆச்சரியம் அடைந்தனர்.

''எனக்கு ஆட்சேபனை இல்லே'' என்று ரவி சொன்னதும் எல்லோரும் அதை ஆமோதித்தனர். உமாவும் சரி என்று ஒத்துக் கொண்டாள்,

ராமு உமாவிடம் சொன்னதின் சுருக்கம் இதுதான்: நீ கல்யாணம் செய்துக்காம உஷா செய்துக்கப் போறதில்லே. நீங்க ரெண்டு பேரும் கல்யாணம் செய்துக்காம ரவியும் செய்துக்கப் போறதில்லே. இப்படி நீங்க மூணு பேரும் இருக்கறதுனாலே உங்க அம்மாவுக்குத் தான் மனக் கஷ்டம். உனக்கு பிரகாஷைத் தவிர இன்னொருத்தனைக் கணவனா ஏத்துக்க இஷ்டமில்லே. இந்தச் சிக்கலை விடுவிக்கறதுக்கு ஒரே வழி நானும் நீயும் கல்யாணம் பண்ணிண்டு ஊருக்குக் கணவனும் மனைவியுமா வாழ்ந்துண்டு நமக்குள்ளே ரகசியமா அண்ணன் தங்கையா வாழ வேண்டியதுதான். நான் உனக்கு அந்த வாக்குக் கொடுக்கிறேன். என் மேல் உனக்கு நம்பிக்கை இருந்தா இதற்கு நீ ஒத்துக்கொள். நாம் இப்படித் தனித் தனியா இருக்கிறதை விடச் சேர்ந்து இருந்துண்டு ஒருத்தரை யொருத்தர் தொடாமல் இருக்கிறது சிரமமான காரியம்தான். இருந்தாலும் மத்தவா நன்மைக்காக நாம இதைச்செய்யணும்னு எனக்குத் தோணறது.'

ராமு இப்படிச் சொன்னதும் அவன் எவ்வளவு பெரிய தியாகத்துக்கும் சோதனைக்கும் தன்னை ஆளாக்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறான் என்பது உமாவுக்குப் புரிந்தது. ராமு அந்த விநாடியில் சாதாரணமனிதனாகத் தெரியாமல் மிகப் பெரிய உயர்ந்த மனிதனாகத் தோன்றினான் அவளுக்கு. இருந்தாலும் அந்த விஷப் பரீட்சைக்குத் தான் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளலாமா, தன்னால் அதில் வெற்றி பெற முடியுமா என்கிற சந்தேகம் அவளுக்கு இருந்தது.

''ராமு! எனக்கு ரெண்டு நாள் டைம் கொடுங்க. நான் யோசிக்கிறேன்'' என்றாள்.

''ரெண்டு நாள் என்ன, நாலு நாள் எடுத்துக்கோ. ஆனா முடிவு சாதகமா இருக்கட்டும். ஏன்னா, வேற வழி இல்லே. மத்தவாளோட கஷ்டத்தைப்பாழ்பண்றதுக்கு நமக்கு உரிமையும் இல்லே'' என்று சொல்லியபடியே நகர்ந்துவிட்டான், மற்றவர்கள் இருந்த இடத்தை. நோக்கி. உமாவும் அவனைப் பின் தொடர்ந்தாள்.

''இன்னும் ரெண்டு நாளில் உமாவிடமிருந்து சாதகமான பதிலை எதிர்பார்க்கலாம்'' என்று சிரித்தபடியே ராமு சொன்னதும் எல்லோருக்கும் ஆச்சரியமாகப் போய் விட்டது. அவர்களிருவருக்கு மிடையே என்ன பேச்சு நடந்தது என்று மற்றவர்கள் எவ்வளவு கேட்டும், ராமுவோ, உமாவோ ஒன்றும் சொல்ல மறுத்து விட்டார்கள்.

அன்று இரவு உமா தூக்கம் வராமல் வெகு நேரம் புரண்டு கொண்டிருந்தாள். ராமு சொல்வதுதான் சரி என்று அவளுக்குப் பட்டது. ராமுவின் எண்ணத்தின் தூய்மையைப் பற்றி அவளுக்குச் சிறிதும் ஐயம் ஏற்படவில்லை. இரண்டு நாளில் தன் சம்மதத்தைத் தெரிவித்து விட வேண்டும் என்ற முடிவுக்கு வந்த பின்தான் அவளால் தூங்க முடிந்தது.

உமா தூங்கி ஒரு அரை மணி நேரம்கூட இருக்காது. ஜானகியின் வேதனைக் குரல் அவளையும் வீட்டில் இருந்த மற்றவர்களையும் எழுப்பி விட்டது. அவளுக்கு ஹெர்னியா இருந்தது. அதை ஆபரேஷன் செய்துவிட வேண்டும் என்று டாக்டர் சொல்லியிருந்தும் அலட்சியமாக விட்டு விட்டிருந்தார்கள். இப்போது அது அதிகமாகிவிட்டது.

ரவி போய் டாக்டரை அழைத்துக்கொண்டு வந்தான். அவர் பார்த்துவிட்டு ''ஸ்ட்ராங்குலேட் ஆயிட்டுது. உடனே ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்றார்.

ஜானகி ஒத்துக்கொள்ளவில்லை. ''ஆபரேஷனும் வேண்டாம் ஒன்னும் வேண்டாம். போனால் புண்ணியம் பண்ணினேன். நான் இருந்து என்ன சுகத்தை அனுபவிக்கிறேன்? பெண்களும் பையன்களும் கல்யாணம் செய்துக்காம சந்நியாசிகளைப் போல வாழ்க்கையை ஓட்டிண்டிருக்கிறதைப் பார்த்துப் புழுங்கறதைவிடச் செத்துப் போறதே தேவலே'' என்றாள்.

மற்றவர்கள் வற்புறுத்தியும் அவள் இணங்குவதாகத் தெரியவில்லை. அவள் படுகிற வேதனையை மற்றவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

வேறு வழியில்லாமல், உமா தான் ஏற்கனவே செய்திருந்த முடிவை, இரண்டு நாள் கழித்துச் சொல்லலாம் என்று நினைத்திருந்த முடிவை, ராமுவை மணக்கத் தனக்குச் சம்மதம் என்கிற முடிவை வெளியிட்டாள். ராமுவுக்கும் அதில் சம்மதம் என்பது தெரிந்ததும் எல்லோருக்கும் அளவற்ற சந்தோஷம் ஏற்பட்டது.

ஜானகி ஆபரேஷனுக்குச் சம்மதித்தாள்.

ஆபரேஷன் முடிந்து ஜானகியின் உடம்பு தேறியதும் முதலில் ராமு—உமா விவாகம் நடந்தது. அதைத் தொடர்ந்து உஷா—விகவம் விவாகமும், ரவி — ராதா விவாகமும் நடந்தேறின. மூன்று விவாகங்களும் ஒரே மாதத்துக்குள்ளாக நடந்தேறின. ஜானகி பத்து வயது குறைந்துவிட்டவள் போல்

---

திருமணம் போன்ற விழாக்களுக்குப் பத்திரிகைகள் அச்சடிக்கும் போது, ''வரவேற்பு மாலை 5 மணி'' என்று குறிப்பிடுவது வழக்கமாக இருந்து வருகிறது.'' அப்படியானால் முகூர்த்தம், நிச்சயதார்த்தம் போன்ற நிகழ்ச்சிகளுக்கு வருபவர்களுக்கு 'வரவேற்பு' கிடையாது என்று அர்த்தமா?

'வரவேற்பு மாலை 5 மணி' என்று குறிப்பிடுவதற்குப் பதிலாக 'தேநீர் விருந்து மாலை 5 மணி' என்றோ 'இன்னிசை மாலை 5 மணி' என்றோ குறிப்பிடலாமே?

-இரா. கந்தசாமி





அவன்: "ஏண்டா ராமசாமி! ஏன் சிறு கதை, துணுக்குகள் எழுதுவதை நிறுத்திட்டு ஆசிரியருக்குக் கடிதங்கள் எழுத ஆரம்பிச் சிட்டே?"

இவன்: "போனவாரம் ஆசிரியருக்கு கடிதங்கள் பகுதியில் வெளியான ராமசாமியின் கடிதம் ஏற்கனவே வேறொரு பத்திரிகையில் நான் எழுதியதுன்னு எவனும் இந்த வார ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் எழுதமாட்டானோ?" உ. ராஜாஜி

மகிழ்ச்சியாக வளைய வந்து கொண்டிருந்தாள்.

உமாவும் உஷாவும் தத்தம் கணவர்கள் வீட்டுக்குப் போய்விட்டனர். ரவி, ராதா, ஜானகி மட்டும் வீட்டில் இருந்தனர். கல்யாணம் நடந்து ஒரு மாதம் கூட இருக்காது.

ஒரு நாள் ரவிக்கு ராதா பரிமாறிக்கொண்டிருந்தாள். ராத்திரி எட்டு மணி இருக்கும். ஜானகி பார்த்துக் கொண்டு பேசியபடி உட்கார்ந்திருந்தாள்.

வாசலில் ஏதோ சத்தம் கேட்டது. யாரோ கதவைத் தட்டுவது போலிருந்தது. ஜானகி போய்ப் பார்த்துவிட்டு, "ஐயையோ, என்ன கண்றாவிடா இது? உனக்கு இப்படியும் ஆகணுமா?" என்று கதறினாள்.

பாலுவைக் கையைப் பிடித்து அவள் உள்ளே அழைத்து வந்தாள். பாலு தட்டுத் தடுமாறி நடந்து வந்தான். அவன் கண் பார்வை போய்விட்டிருந்தது. அவனோடு கூட வந்தவர் விஷயத்தை விளக்கினார். கள்ளச் சாராயம் சாப்பிட்டு அதில் ஏதோ ஆபத்தான விஷம் கலந்திருந்ததால் பலர் செத்துப் போய்விட்டதாகவும், பலபேருக்குக் கண் போய்விட்டதாகவும் அவர்களில் பாலுவும் ஒருவன் என்றும் சொல்லி விட்டு அவர் போய்விட்டார்.

ரவி பாலுவைக் கட்டிக் கொண்டு கண்ணீர் பெருக்கினான்.

"ஏன் எல்லோரும் ஒப்பாரி வைக்கிறீங்க? இப்ப நான் என்ன செத்தா போயிட்டேன்? அப்பாவுக்குக் கொள்ளி போட மாட்டேன்னு சொன்னேன். அதனாலேதான் என் கண்ணுக்கே கடவுள் கொள்ளி வெச்சுட்டான்னு நினைக்கிறேன். அதை விட்டுட்டு ஏன் அழணும்?" என்றான்.

"அண்ணா, உன் சுபாவம் மாறவே மாறாதா? இனி இந்த நிலையில் உன்னை வைச்சுண்டு எப்படிச் சமாளிக்கப் போறேமோ!" என்று ரவி நினைத்துக் கொண்டான்.

இரவு படுக்கையறையில் ரவி படுத்துக் கொள்ளாமல் பேப்பரும் பென்சிலும் வைத்து ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தான். ராதா அவன் என்ன எழுதுகிறான் என்று பார்த்தாள். வெறும் முக்கோணம் முக்கோணமாகப் போட்டிருந்தான்.

"என்ன இது?" என்று கேட்டாள்.

ரவி விளக்கினான்.

"நான், உமா, உஷா மூன்று பேரும் ஒரு முக்கோணமா இருந்தோம். உமாவும் உஷாவும் போனப்புறம் நான், நீ, அம்மா மூணு பேரும் ஆனோம். இப்போ பாலு வந்துட்டான். இனி அம்மாவை வெளியே நிறுத்திட்டுப் பாலுவை முக்கோணத்தில் சேர்த்துக்கணும். நான், நீ, பாலு இவங்க தான் இப்போ. பாலுவோட சுபாவத்தை நீ பொறுத்துண்டு போகணும் ராதா. ஐ எம் சாரி. நான் என்ன பண்ணட்டும்?"

"அதைப் பத்தி நீங்க கவலையே பட வேண்டாம். நான் அவர் சுபாவத்தையே மாத்திடறேன்" என்றாள் நம்பிக்கையுடன்.

ரவி நன்றியோடு அவளைப் பார்த்தான்.

"நான் ஒரு முக்கோணம் போட்டுக் காமிக் கட்டுமா?" என்று கேட்டபடி அவனிடமிருந்து பேப்பரையும் பென்சிலையும் வாங்கி ராதா ஒரு முக்கோணம் வரைந்தாள். முக்கோணத்தில் பாப்பா – (ஆண் அல்லது பெண்), ரவி, ராதா என்று குறிப்பிடப்பட்டிருந்தது!

அதைப் பார்த்துவிட்டு ரவி மகிழ்ச்சியுடன் சிரித்தான்.

"ராதா இத்தனை அவசரமா உனக்கு?"

"கல்யாணத்துக்குக் காத்திண்டிருக்கவேண்டியதாச்சு. இதுக்காவது அவசரப்படலாமில்லையா?" என்று கூறி அவன் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் முதுகைக் கனிவுடன் தடவிக் கொடுத்தான் ரவி.

(முற்றும்)



# மாஸ்கோ செல்லும் ஐவர்



தமிழகத்திலிருந்து மாஸ்கோ ஒலிம்பிக் பந்தயத்தில் யாராவது கலந்து கொள்ளச் செல்கிறார்களா என்று நீங்கள் கேட்பது காதில் விழுகிறது! மாஸ்கோ செல்லும் தமிழக விளையாட்டுச் செல்வங்கள்!

### ஹாக்கி காப்டன் வி. பாஸ்கரன்

● ஒலிம்பிக் ஹாக்கிப் பந்தயத்தில் கலந்து கொள்ளக் காப்டன் பதவி வகிப்பவர் திரு வி. பாஸ்கரன் தென்னிந்திய ரயில்வேயில் பணி புரிபவர். 1975ம் வருஷம் நியூஸிலந்துக்குப் பயணம் செய்த இந்தியர் குழுவில் ஆடியவர் இவர். 1976ம் வருஷம் மாண்ட்ரியால் ஒலிம்பிக்கில் பங்கேற்றவர். புவனஸ் ஏர்ஸில் நடைபெற்ற உலகக் கோப்பையில் இந்தியப் பிரதிநிதி. பாங்காக் ஆசிய விளையாட்டுப் போட்டியில் வெள்ளிப் பதக்கம் சூடிய குழுவில் ஒருவர். பாகிஸ்தான், ஆஸ்திரேலியா சென்று ஆடியிருக்கிறார். 1979 ப்ரீ ஒலிம்பிக்கிலும் கலந்துகொள்ளும் பாக்கியம் பெற்றவர்.

### கூடைப் பந்தாட்டத்தில் அமர்நாத்

● கூடைப் பந்தாட்டக் குழுவில் இடம் பெற்றிருக்கும் அமர்நாத். பள்ளியில் படிக்குகையில் ஓட்டப் பந்தய வீரர். பெரியகுளத்தில் நடைபெற்ற அகில இந்தியக் கூடைப் பந்தாட்டப் போட்டியே இவரைக் கூடைப் பந்தாட்டத்தை ஆடத் தூண்டிவிட்டது! சர்வ கலாசாலைகளுக்கான கூடைப் பந்தாட்டப் போட்டியில் மதுரை 'ரன்னர்' பதவியைப் பெறப் போராடியவர் அமர்நாத். இவரது கூடைப் பந்தாட்டத் திறமை மதுரை கோட்ஸ் கம்பெனியில் உத்தியோக வாய்ப்பைப் பெற உதவியது. 1975ம் வருஷத்திலிருந்து அமர்நாத் தமிழக ராஜ்யக் குழுவில் ஆடி வருகிறார். இவருக்கு 1979ம் வருஷத்திலிருந்து தமிழகத்தின் காப்டனாகும் பொறுப்புக் கிட்டியது. ஜெய்பூர் தேசியப் போட்டியில் அமர்நாத் பரிமளித்தார்! ஸ்டேட் பாங்கிக் குழுவின் காப்டனாக உள்ள அமர்நாத் பொறுமையே அணிகலனாகப் பெற்றவர்.

### பளு தூக்கும் சாம்பியன் தமிழ்செல்வன்

● வேலூரில் 1957 பிப்ரவரி 3ம் தேதி பிறந்த தமிழ்ச் செல்வன் 1972ம் வருஷத்திலிருந்து. பளு தூக்கும் போட்டியில் பங்கேற்கிறார். பாண்டம் வகுப்பில் தேசிய ரிகார்டு பெற்றவர் தமிழ்ச் செல்வன். எட்மாண்டனில் நடைபெற்ற பதினொன்றாவது காமன்வெல்த் போட்டியில் 1978ம் வருஷம் வெள்ளிப் பதக்கம் சூடியவர். பாண்டம் வகுப்பில் 105 கே. ஜி. தூக்கி ஒரு புதிய ரிகார்டை ஏற்படுத்தியவர். இவரது திறமைக்குப் பரிசு அர்ஜுனா விருது. இவர் ஐ.ஸி.எப்.பில் பணி புரிந்து வருகிறார்.

### பளு தூக்கும் சாம்பியன் கருணாகரன்

● தென்னிந்திய ரயில்வேயில் பணிபுரியும் கருணாகரனுக்கு 1978, 1979ம் வருஷ பளு தூக்கும் தேசிய சாம்பியன் பட்டம் உண்டு. 1978ல் எட்மாண்டனில் நடைபெற்ற காமன் வெல்த் போட்டியில் தங்கப் பதக்கம் சூடியவர். 1980ம் வருஷம் கார்டிப்பிலும் மற்றொரு தங்கப் பதக்கம் இவருக்குக் கிடைத்தது.

1979ம் வருஷம் இவரது திறமைக்கு அர்ஜுனா விருது கிட்டியது. 52 கே.ஜி. ப்ளைவெயிட் சாம்பியன் இவர். உலக சாம்பியன்களோடு மாஸ்கோ ஒலிம்பிக்கில் மோதும் வாய்ப்பு இவருக்குக் கிட்டியுள்ளது.

### ஓட்ட வீரர் சுப்பிரமணியம்

● போலீஸ் பந்தயங்களில் திரு சுப்பிரமணியம் ரிகார்டு கண்டுள்ளார். புகழ்பெற்ற ஓட்ட வீரர் ஞானசேகரனை ஓட்டப் பந்தயத்தில் வென்ற பெருமை இவருக்கு உண்டு.

திருச்சியில் போலீஸ்காரராகப் பணி புரியும் சுப்பிரமணியம் மாஸ்கோ ஒலிம்பிக்கில் கலந்து கொள்ளும் வாய்ப்புப் பெற்றுள்ளார்! இவரது குரு போலீஸ் அதிகாரி திரு ரெட்டியார்.

—குண்டுமணி

# அத்தியாயம் 51

## சோலையில் சொர்க்க கீதம்

அமைதி மிகுந்த அந்த இரவில், பெருங்காற்று திடீரென்று அடங்கிச் சுகமான தென்றல் லேசாக வீசியதால் மரங்களில் இலைகள் அசைந்து உராய்ந்து கூட்டிய இன்ப சுருதியில், கடல்கூட ஓரளவு அடங்கி அலைகளைத் தரையில் மோதி சுகமாகத் தாளம் போட்ட சூழ்நிலையில், ரத்னாவின் ரமணீயமான குரல் அந்தச் சோலையையே இன்ப மயமாக அடித்துக்கொண்டிருந்தது. இத்தனைக்கும் அவள் தன் உதடுகளை அதிகமாகத் திறந்தோ குரலை அதிகமாக உயர்த்தியோ பாடவில்லை. அளவுடன் அதரங்கள் திறந்தன, செண்பக மொட்டைப் பழிக்கும் நாசி சில சமயங்களில் எழுந்தும் தாழ்ந்தும் 'உம்'காரத்தை ஓங்காரம் போல் ஒலிக்கச் செய்தது. அதரங்களில் உதிர்ந்த சொற்கள் திட்டமாகத் துலங்கவில்லைதான். அப்படித் துலங்காமலிருந்ததிலேயே அவள் கீதத்தில் ஒரு அழகு இருந்தது. அலங்காரமிருந்தது. இதயத்தைத் தொடும் இன்பமும் வேகமும் இருந்தது.

அந்த கீதத்தைக் கேட்டவர்கள் இசை மேதைகளா யிருந்தால், ராணியின் இன்ப கானத்தைப் பருகியிருக்க மாட்டார்கள். அந்த அகாலத்தில் அவள் பாடியது கர்நாடக மோகனமா வடநாட்டு 'பூப்'பா, இரண்டும் கலந்த கதம்பமா என்ற ஆராய்ச்சியில் இறங்கி யிருப்பார்கள். சில சமயங்களில் அதிக ஆராய்ச்சியும் சுகத்தைக் கெடுத்து விடுகிறது என்ற உண்மையை அறிந்திருக்க மாட்டார்கள். 'அதி ஸர்வத்ர வர்ஜயேத் (அதிகப்படியை எல்லாவற்றிலும்



கைவிடு)'' என்ற சாஸ்திர வாக்கியத்தையும் லட்சியம் செய்திருக்க மாட்டார்கள்.

இசையின் நுணுக்கங்களை அறிந்துதான் அதை அனுபவிக்க வேண்டும் என்ற நியதி சிருஷ்டியில் கிடையாது. ''சிசுர் வேத்தி பசுர் வேத்தி, வேத்தி கான ரஸம் பணீ'' (குழந்தை அறியும், மிருகம் அறியும், நல்ல பாம்பறியும்) என சங்கீதத்தின் சிறப்பு கூறப்படுகிறது. கேட்டவர்களுக்கு மட்டுமல்ல இந்த விதி. பாடுபவர்களுக்கும் உண்டு. குயில் தனது குரல் அறிந்து கூவவில்லை. சுழன்றடிக்கும் புயல், வேதத்தின் அஸ்திவாரமான பிரணவத்தை அறிந்து ''ஓம்''காரத்தைக் கிளப்பவில்லை. இயற்கை அளித்த சக்தி இவற்றை உருவாக்குகிறது. அதில் சுகமிருக்கிறது. அதை எல்லோருமே அனுபவிக்கிறார்கள்.

ஆகவே மிகக் குரூரமான ஸில்வர் கூடராணியின் அந்த இன்ப கீதத்தில் கை கால்களில் விலங்கு போட்டவன் போல் நின்று விட்டதிலோ, இன்னொரு புறம் தோப்பில் நுழைந்த மற்ற இருவரும் கூடத் திடீரென பக்கத்து மரங்களில் பதுங்கிப் பதுமைகளை ஸ்தம்பித்து விட்டதிலோ என்ன விந்தை



இருக்க முடியும்? அந்த மூவரில் ஸில்வரே அதிகமாக இசையில் திளைத்துத் தனது தடியைக் கக்கத்தில் நன்றாக அழுத்திவிட்டு, ஒரு காலைத் திடமாக ஊன்றிக் கொண்டு பிரமை பிடித்து நின்றான்.

கொள்ளைக்காரனாக இருந்தாலும் ஸில்வரும் நன்றாகப் பாடக் கூடியவன். அவனது ''யோ ஹோ ஹோ அண்ட் எ பாட்டில் ஆப் ரம்'' என்ற உணர்ச்சிப் பாட்டு எத்தனையோ கடற்கொள்ளைக்காரர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டிருக்கிறது. அனந்த் கூட அதில் மயங்கியவன்தான். அவனே முதலில் கர்ஸண்ட்ராவுக்குச் செல்லும் போது ஸில்வரைப் பாடத்- தூண்டியிருக்கிறான். ஸில்வர் திரும்பத் திரும்ப அந்தப் பாட்டை உணர்ச்சியுடன் பாடும்போது கொள்ளைக்காரர்கள் ஆடுவார்கள், உடன் பாடுவார்கள், உணர்ச்சி மிகுந்து கயிறிலே இழப்பார்கள். அத்தகைய வெறியூட்டும் பாட்டு ஸில்வரின் பாட்டு.

ஆனால் தன் சங்கீதத்தை விட மிக இன்பமான சங்கீதம் உலகத்தில் உண்டு, கொள்ளைக்காரனை தன்னையும் ஈர்க்கும் சக்தி அதற்கு உண்டு என்பதை அன்று ஸில்வர் அறிந்தான். பாண்டவகட்டின் தென்னஞ்

அஸ்ஸாமில் 'சரஸ்வதி' என்ற பெயர் ஆட வருக்கும் உண்டு; பெண்டிருக்கும் உண்டு. சிறந்த எழுத்தாளரான ஆடவர்களுக்கு 'சாஹித்ய ரதி' என்ற பெண் பாற்பட்டம் வழங்கப் படுகிறது.

-பி. நாராயணன்

சோலையில். ''இரக்கமற்ற இந்தக் கொள்ளைக் காரிக்கு இத்தகைய சங்கீதம் எப்படி வந்தது?'' என்று தன்னைத் தானே வினவிக் கொண்டான் வில்வர். தான் இரக்கத்தின் அவதாரம் போல.

அவள் ''ஹுங்கார' கீதம் மெள்ளமெள்ள உச்சஸ்தாயியை எட்டிக் கொண்டிருந்தது. அவள் பங்கஜ முகத்திலிருந்த விழி வண்டுகள் கீழே இருந்த அதரத் தேனை அருந்தும் எண்ணத்துடன் தாழ்ந்தன. ஆனால் அசைந்த இதழ்கள் நன்றாகத் திறக்கவே, திறந்த கண்டத்திலிருந்து அடக்கி வெளியே விடப் பட்ட நாதம் சோலையில் சுழலவே, விழி வண்டுகள் மேலே ஏறி அவளுக்கு மயக்கத்தை அளித்தன.

அவள் சாரீரத்திலிருந்து அடக்கத்துடன் வந்ததாலேயே, அடக்கமுள்ள பருவப் பெண்ணின் வசீகரம் போலவே அதிக வசீகரத்தைப் பெற்ற மோகன ராகம் சோலையைச் சுற்றிக் கொண்டது. அளவோடு கூடிய சஞ்சாரம், அளவை மீறுமலேயே மின்னல் போல் அவ்வப்பொழுது வெளிப்பட்ட பிருகா, எல்லாம் பெரு மயக்கத்தை அளித்தது கேட்டவர்களுக்கு. அதை அவளும் அனுபவித்திருக்க வேண்டும். கண்களை அவள் மூடிக் கொண்டாள் பல விநாடிகள்.

கண்களை மூடுவதற்கு வேதாந்தம் சொல்லும் காரணம், பார்வையை உள்ளே திருப்பி ஆத்மாவையும், அந்தராத்மாவான பரமாத்மாவையும் பார்ப்பதற்கு என்பது. அது தெரிந்தோ, தெரியாமலோ கண்களை மூடியதும் ரத்னாவின் ஆத்மாவிலிருந்து சங்கீதம் பிரவாகித்தது. உலகை மயக்கும் உன்னத சாரீரம்; அது உன்மத்தத்தை அளிக்கவில்லை; ஏதோ பெரும் சாந்தியை அளித்தது.

அந்த சாந்தியே சங்கீதத்தை இயக்கியதால் சங்கீதம் சங்கீதமாகவே இருந்தது. அவள் ஆத்ம உணர்ச்சிகளை கீதத்தின் மூலம் இதய ஒலியின் மூலம் அவள் கொட்டினாள். சோகமான கீதம்தான். சோகத்திலும் சுகமிருக்க முடியும் என்பதற்குச் சான்றாக விளங்கியது அவள் கீதம். ''எல்லோருக்கும் விடிவு காலம் உண்டு. விடிவு வராது போவதும் உண்டு'' என்று பொருள் படும்படியாக சம்ஸ்கிருத சுலோகம் ஒன்றையும் ராகத்துடன் இணைத்து ஓட்டினாள் ரத்னா தனது சுகபாவ சங்கீதத்தில். சோக முத்திரை பதியப் பதிய ராக வேகமும் அதிகமாகவே அவள் சுய உணர்வை இழந்தாள். ரதி விலாஸத்துக்கே ஏற்பட்டது போன்ற அவள் ரம்ய சரீரம் இசையுடன் இணைந்து, தென்றலால் அசங்கிய மரக் கிளை போலவே அப்படியும் இப்படியும் வெகு லேசாக ஆடியது.

காற்றில் கிளைகள் ஆடும்போது சில இலைகள், புஷ்பங்கள், பழங்கள் அனைத்துமே ஆடுவதுண்டு. அப்படி ஆடும்போது பழுத்த இலைகளும் பழங்களும் உதிர்ந்து விடுவதும் உண்டு. ஆனால் இசைக் காற்று அந்த இயற்கை நியதிக்கு விலக்கு என்பதை ரத்னா நிரூபித்தாள். அவள் கொடி போன்ற மேனி இசையால் ஆடியபோது பழங்கள் ஆடவில்லை, அசைந்தன, மயக்கமூட்டும் வகையில். பங்கய வதன மலரின் இதழ்கள் உதிரவில்லை, அசைந்தன, திறந்தன. மூடிய கண்களை சற்று மேலே வளைந்த புருவ விற்கள் காத்து நின்றன. சுருதி மேலே ஏறியபோது அவையும் ஏறி வளைந்தன. வளைந்து வாளாவிருக்கவில்லை. இந்து பூங்கணைகளை வீசவும் செய்தன.

இப்படி அசைந்தாடி மேல் ஸ்தாயியில் பஞ்சமத்திலேயே நின்று சுழன்று ரீங்காரம் செய்த அவள் சாரீரம், அதிலிருந்து விரிந்த சோகம், இரண்டும் சோலையை அசைத்திருக்க வேண்டும். இலைகள் தங்கள் மீது உறைந்து கிடந்த பனித் துளிகளைக் கண்ணீர்த் துளிகளாக உதிர்த்தன. காற்றில் அவள் கீதத்துக்கு மரம் அசைந்ததால் சரேலென்று அவள் கன்னத்தில் விழுந்து மடியில் தஞ்சமடைந்து செக்கச் செவேலென்று கிடந்த முந்திரிப் பழமொன்று அவள் வெள்ளைச் சேலைக்குத் தனி அழகு கூட்டியது. அவள் மடியில் அது சிவந்து



# புத்தம் புதியது!

# எதிர்பார்த்த முழு ஆயுள் பாலிசி

**50%** காப்புத் தொகையில் சரிபாதி பாலிசி காலத்தில் தவணை களில் வழங்கப் படுகிறது.



**100%** உங்கள் குடும் பத்திற்கு எப்போதும் நூற்றுக்கு நூறு ஆயுள் இன்ஷ் யூரன்ஸ் பாதுகாப்பு.



## கவர்ச்சிகரமான இரட்டைப்பலன் திட்டம்

- பாலிசி காலத்திலேயே காப்புத் தொகையில் சரிபாதியை ஈட்டுகிறது.
- பாலிசி காலத்திற்குப் பின்னல் எப்போதும் நூற்றுக்கு நூறு இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பை அளிக்கிறது.

நீங்கள் ஒரு பாலிசியை 20 அல்லது 25 ஆண்டு காலத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். உதாரணமாக நீங்கள் 35 வயதில் ஒரு 20 ஆண்டு கால அளவு கொண்ட பாலிசியை எடுத்தால், எதிர்பார்த்த முழு ஆயுள் பாலிசி இரண்டு தனிப்பட்ட வகைப் பலன்களை அளிக்கிறது. 20 ஆண்டுகளுக்குள்ளாக இப்பாலிசியிலிருந்து சமகால அளவுகளில் திரும்பக் கிடைக்கப்பெறும் பணத்தைக்கொண்டு நீங்கள் உங்களுடைய குறுகிய காலத் தேவைகளை சமாளிக்கிறீர்கள். அத்துடன், பிரீமியங்கள் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் முடிந்தபிறகும், உங்கள் குடும்பத்திற்கு முழுமையான நீண்ட கால ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பை அளிக்கிறது.

தன்னுடைய 35ஆவது வயதில் ஒருவர் ரூ. 25000 காப்புத் தொகைக்கு எடுத்துக் கொண்ட 20 ஆண்டுகால பாலிசி எவ்வாறு செயல்படுகிறது என்று பாருங்கள்.

40 வயது வரை ஜீவித்து அவர் ரூ. 3125.00 பெறுகிறூர்

45 வயது வரை ஜீவித்து அவர் ரூ. 3125.00 பெறுகிறூர்

50 வயது வரை ஜீவித்து அவர் ரூ. 3125.00 பெறுகிறூர்

55 வயது வரை ஜீவித்து அவர் ரூ. 3125.00 பெறுகிறூர்

பாலிசியின் காலம் முடிந்தபிறகும் கூட, அவர் இறக்க நேரிடின், அவர் குடும்பம் காப்புத் தொகையை அடைய உரிமையுள்ளதாகிறது.

பாலிசியின் காலமாகிய 20 வருடங்களில் எப்போதாகிலும் அல்லது 20 வருடங்களுக்குப் பின் எத்தருவாயிலும் இறப்பு நேரிட்டால், பாலிசிதாரர் ஏற்கனவே பல தவணைகளை திரும்பப் பெற்றிருந்த போதிலும், அவர் குடும்பம் முழு காப்புத் தொகையையும் போனஸையும் அடையும்.

இந்த ஒப்பற்ற பாலிசி உங்கள் குடும்பத்திற்கு இரட்டைப் பலன்களை கொண்டு வருகிறது. உங்கள் எல்ஐசி முகவரையோ அல்லது அருகிலுள்ள கிளை அலுவலகத்தையோ அணுகுங்கள். எதிர்பார்த்த முழு ஆயுள் பாலிசி என்று பெயர் சொல்லிக் கேளுங்கள்.

லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

RADEUS/LIC/SP-37

விழுந்து கிடந்ததால் விஷய வேட்கைக்கும் ஓரளவு இடம் கொடுத்தாலும், தெய்வீக மான ராக ஸஞ்சாரம் அதைத் திரையிட்டு மறைத்தது.

அந்த ராகத்தைக் கேட்டுக் கொண்டு ஸ்தம்பித்து நின்ற வில்வர் தனது தடியை மெல்லக் கீழே வைத்துவிட்டுத் தரையில் உட்கார்ந்தான். தூரத்தே மரங்களில் பதுங்கி யிருந்தவர்களும் அப்படியே மணலில் உட் கார்ந்தார்கள். சோலையின் மூன்றும் பக்கத்தி லிருந்த புதரிலிருந்து வெளியே வந்தவேறு இரு வரும் அங்கிருந்த முந்திரிக் கிளை ஒன்றில் அமர்ந்தார்கள். அவர்களிலொருவர் குரலும் மெல்ல அசைந்தது மந்தரத்தில். அந்த மந்தரம் ரத்னனின் மேல் ஸ்தாயிக்கு அஸ்திவார பீடம் அளிக்கவே இரண்டும் சேர்ந்து இழைந்தன. அந்த மற்றொரு சாரீரம் இணைந்ததை யாரும் கவனிக்க வில்லை. அத்தனை சாமர்த்தியமாகவும் படிப் படியாகவும் லகுவாகவும் அந்த ஆதார சுருதி கூட்டப்பட்டது. அது மிகுந்த எச்ச ரிக்கையுடன் எழுந்து ரத்னனின் கண்ட த்வனியுடன் கலந்து விட்டதால் கலந்தது தெரியவில்லை; சரியான வித்வான் மோகனத் தில் பூப் கலப்பதைப் போல. தெரிந்தால் தானென்ன? சுகம்தானே முக்கியம்? 'ஸாகரு வேணி ஸங்கீத மெத்துகு' என்ற தெலுங்கு வாக்கியம் அர்த்தமில்லாமலா அமைந்தது?

சுகத்துடன் இணைந்த அந்த இரு சாரீரங் களும் இரண்டறக் கலந்ததால் ஒரே சாரீ ரம் மேல் ஸ்தாயியிலும் கீழ் ஸ்தாயியிலும் ஒரே காலத்தில் இயங்குவதைப் போன்ற பிரமை ஏற்பட்டது கேட்டவர்களுக்கு.

அந்த ஸங்கீத சுகத்தில் வந்த காரியத்தை மறந்தான் வில்வர். அவன் தோளிலிருந்த கிளிகூட சிறிதளவு சப்தம் செய்யாமல் பதுமைக் கிளியென உட்கார்ந்திருந்தது. அதன் கண்கள் கூட மூடிக் கிடந்தன. அதன் அசுரத் தன்மை எங்கோ ஓடிவிட்டது. அதன் பஞ்சவர்ண இறக்கைகள் கெட்டியாக உடலில் ஒட்டிக் கிடந்தன. அசுரத் தன்மை கன்வரத்துக்கு அடங்கிவிட்டதை மற்ற பட்சி ஜாலங்களும் உணர்ந்திருக்க வேண் டும். அந்தச் சோலையில் வழக்கமாக அலறும் ஆந்தை கூட அன்று அலறவில்லை. எங்கும் நிம்மதி. எங்கும் ஒரே சுகம். இயற்கை அளித்த இரு சுக சாரீரங்கள் இணைந்து சோலையில் சொர்க்கத்தைச் சிருஷ்டித்தன.

ஆனால் எந்த சுகத்துக்கும் ஓர் அளவும் முடிவும் உண்டல்லவா? அதற்கு திருஷ்டாந் தம்போல் இன்னொரு படகும் அடைந்தது பாண்டவகட்டை. அதிலிருந்து இறங்கினான் ஒரு புது மனிதன்.

சிறிது நேரம் கரையில் நின்று நாற்புறமும் நோக்கினான். பிறகு தலையை ஆட்டிக் கொண்டு சோலையை நோக்கி நடந்தான்; அவனும் சங்கீதத்தைக் கேட்டான். ஆனால் அது அவனை இம்மியும் தொடவில்லை என் பதை அவன் முகம் நிரூபித்தது. பயங்கர முகம். கொலைக் குணம் அதில் குடிகொண் டிருந்தது. (தொடரும்)

## கேக்கிலும் ஒலிம்பிக்!

ஒலிம்பிக் கேக்குகள் தயார். லெனின்ரோட் சமையல்காரர்கள் ஒலிம்பிக் சின்னங்களை வைத்துப் பலவித கவர்ச்சி கேக்குகளை ஒலிம்பிக் விருந்தினர்களுக்குத் தயாரித்திருக்கின்றனர்.





# ஒரு கிராமம் வழி காட்டுகிறது!



தமிழகத்தில் தூத்துக்குடியிலிருந்து பதினைந்து கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது அத்திமரப்பட்டி என்ற கிராமம். எளிமையான இச்சிறிய கிராமத்தில் சுமார் அறுநூறு குடும்பங்கள் உள்ளன. ஜனத்தொகை மூவாயிரத்துக்கு மேல் தேறும். படித்தவர்கள் எண்ணிக்கை குறைவுதான். தொழில் விவசாயம் தான். வாழையும் நெல்லும் முக்கிய பயிர்கள். கிராமத்தின் சுற்றுப்புறத்தில் நிறைய உப்பளங்கள் உள்ளன. தூத்துக்குடி ஸ்பிக் நகருக்கு அருகில் நெடுஞ்சாலையிலிருந்து பிரிந்து செல்லும் மண் பாதையில் சுமார் ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது இக் கிராமம்.

அரசியலை விளையாட்டாகவும், விளையாட்டில் அரசியலைப் புகுத்தியும் செயல்பட்டு ஜனநாயக மரபுகளிலும், அடிப்படை நெறிகளிலும் நமக்குள்ள நம்பிக்கைகளைத் தகர்க்கும் விதமாகப் பல ஆட்சியாளர்களும் அரசியல்வாதிகளும் செயல்பட்டு வரும் சமுதாயச் சூழலில் அத்திமரப்பட்டிவாசிகள் ஒரு புதிய சகாப்தத்தைப் படைத்து வருகிறார்கள்.

22-6-80 அன்று அத்திமரப்பட்டி கிராமவாசிகள் ஒன்றுகூடித் தேர்தல் முறை ஓட்டெடுப்பு மூலம் தங்கள் கிராமத்தில் மதுவிலக்குக் கொள்கையைத் தீவிரமாக அமுல் படுத்த வேண்டும் என்று 474 பேர் மதுவிலக்குக்கு ஆதரவாகவும் 46 பேர் எதிரிடையாகவும் வாக்களித்து முடிவு செய்திருக்கின்றனர்.

இத்தகைய ஓட்டெடுப்புக்கான அடிப்படைச் சூழ்நிலையையும், தமிழக அரசே பர்மிட் உள்ளவர்கள் குடிக்கலாம் என்று அனுமதிக்கும்போது அத்திமரப்பட்டியில் எவருமே குடிக்கக் கூடாது என்பது எவ்விதத்தில் சரியானது என்று ஆராயலாம் என்ற எண்ணத்தில் 'கல்கி' சார்பில் அத்திமரப்பட்டிக்குப் போனேன்.

தமிழக அரசு பஞ்சாயத்துக்களைக் கலைத்து விட்ட போதிலும் அத்திமரப்பட்டியில் மக்களாகத் தேர்ந்தெடுத்துப் பஞ்சாயத்து சபை செயல்படுகிறது என்ற செய்தி என்னை வரவேற்றது.

பஞ்சாயத்துத் தலைவர் திரு ஜெயவீர பாண்டியனைச் சந்தித்த போது, ''இந்த ஆண்டுமட்டுமல்ல, சென்ற ஆறு ஆண்டுகளாக அத்திமரப்பட்டி மக்கள் மது விலக்குக் கொள்கையில் கடைப்பிடித்து வரும் தீவிரம், தமிழகத்தில் மட்டுமல்ல,



✖ பஞ்சாயத்து தலைவர்களும் கிராமமக்களும்

✖ பஞ்சாயத்துத் தலைவர் ஜெய வீரபாண்டியன்

✖ அன்னத்தாயி.

இந்தியாவிலேயே நீங்கள் எங்கும் காண முடியாது. எங்கள் கிராமத்தைப் பற்றிச் சுற்றுப் புறத்திலும், போலீஸ் துறை, கலெக்டர் என்று அனைவரும் நன்கு அறிவர். நாங்களாக விளம்பரம் செய்துகொள்ள விரும்பவில்லை. விஷயங்கள் அறிய நீங்களாகத் தேடி வந்திருப்பது மனத்துக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்றார்.

இதற்குள் விஷயம் அறிந்து கிராமத்தின் முக்கியஸ்தர்கள் கூடிவிட்டனர்.

''ஆறு ஆண்டுகளாக மது விலக்குக் கொள்கை அத்திமரப்பட்டியில் அமுலில் இருந்து வருவதாகக் கூறினீர்கள். அப்படி இருக்கச் சமீபத்தில் வோட்டெடுப்பு நடத்த வேண்டிய அவசியம் என்ன?'' என்று நான் கேட்டதும் திரு ஜெயவீர பாண்டியன் எல்லா விவரங்களையும் கூறினார்:

''அத்திமரப்பட்டி இன்று எந்த நிலையில் உள்ளதோ அதற்கு முற்றிலும் நேர் மாறாக 1974ம் ஆண்டுக்கு முன் இருந்தது. கள்ளச் சாராயம் காய்ச்சுவது, விற்பது, குடிப்பது என்பது எங்கள் கிராமத்தில் தண்ணீர் பட்ட பாடாய் இருந்தது. அத்திமரப்பட்டியும், பக்கத்தில் உள்ள இன்னொரு கிராமமும் தூத்துக்குடி மொத்தத்துக்கும் கள்ளச் சாராயம் விநியோகம் செய்து வந்தது என்றால் அது மிகையல்ல. பெரும்பாலான கிராமவாசிகள் விவசாயத்தைக் கவனிக்காமல் மூட்டை கட்டி வைத்துவிட்டுச் சாராயம் காய்ச்சுவதில் ஈடுபட்டனர். பெண்களும் கூட ஈடுபடலாயினர். இரவு, பகல் என்று பாராமல் குடிப்பவர்களின் எண்ணிக்கை பெருகியது.

''கோஷ்டிச் சண்டை, அடிதடி, குத்து வெட்டு என்று தகராறு இருந்த வண்ணம் இருக்கும். அத்துமீறிக் குடித்தவர்கள் தெருவில் விழுந்து புரண்டு கிடப்பார்கள். ஒருவன் அபரிமிதமாகக் குடித்துவிட்டு மழை நீர் வாய்க்காலில் முகம் பதிய விழுந்து மறுநாள் பிணமாகக் கிடந்தான்.

''திடீரென்று போலீஸ் 'ரெய்டு' வரும். காய்ச்சுபவர்களையும், சரக்கையும் தூக்கிப் போட்டுக் கொண்டு போய்விடும். போலீஸ் வருவதை மோப்பம் பிடித்து ஆண்கள் ஓடி விடுவார்கள். பெண்களைப் போலீஸ் கைது செய்து அழைத்துச் சென்றுவிடும்.




''கிராமமே சீர்கெட்டது. ஒரு தடவை நிரபராதி ஒருவரைச் சாராயம் காய்ச்சினதாகப் போலீஸ் கைது செய்து அழைத்துச் சென்றது. அவருக்காக நாங்கள் வாதாடியபோது, ''நிரபராதியைக் கைது செய்தபோது தான் உங்களுக்கு உறைக்கிறது. உங்கள் கிராமத்தைத் திருத்த இது மாதிரி செய்வதுதான் சரியான வழி'' என்றார், அப்போது டி. எஸ். பி.யாக இருந்த திரு மனோகரன்.

''இந்நிலைக்கு முடிவு கட்ட வேண்டும் என்ற முனைப்பில் நாங்கள் சிலபேர் கூடிப் பிரச்னையை அலசி ஆராய்ந்தோம்.

''கிராமப் பஞ்சாயத்தாக முன்நின்று அத்திமரப்பட்டியில் சாராயம் காய்ச்சும், குடிக்கும் நிலையை விரட்ட எந்த நடவடிக்கை எடுத்தாலும் அதற்குப் போலீஸ் முழு ஒத்துழைப்பையும் அளிக்கும் என்று டி. எஸ். பி. மனோகரன் வாக்களித்தார்.

''பஞ்சாயத்து தண்டோரா போட்டுக் கிராமம் முழுவதையும் கூட்டியது.

''மது அரக்கனல் அத்திமரப்பட்டியில் நிலவும் அவலங்களை விவரித்துப் பேசினோம். சாராயம் காய்ச்சுபவர்கள் வேறு தொழிலில் ஈடுபடப் பஞ்சாயத்தின் உதவிகள் இருக்கும் என்று வாக்களித்தோம். அத்திமரப்பட்டியினுள் சாராயம் நுழையாதபடி கவனித்துக் கொள்ள மக்களது ஆதரவை நாடினோம்.

''டி. எஸ். பி. மனோகரன் தமது மிரட்டல் கலந்த எச்சரிக்கையை விடுத்தார்.

''29-12-74ம் ஆண்டு அப்பஞ்சாயத்து சபையில் எடுத்த தீர்மானப்படி அத்திமரப்பட்டியில் பூரண மதுவிலக்கு அமுலுக்கு வந்தது.

''திரு ஆறுமுக நாடாரை முதல் தலைவராகக் கொண்டு ஐந்து ஆலோசகர்கள், சில கண்காணிப்பாளர்கள் ஆகியவர்களின் உதவியுடன் மதுவிலக்குக் குழு செயல்படத் தொடங்கியது.

''குடிப்பவர்களுக்கு ரூ. 25 அபராதம் என்றும் இதில் 5 ரூபாயைக் குடிப்பவர்களைப் பிடித்துக் கொடுப்பவருக்குச் சன்மானமாகக் கொடுக்கப்படும் என்றும் தீர்மானம் செய்தோம். இந்நிலை இன்றும் தொடர்கிறது.

''ஆரம்பத்தில் ஏற்பட்ட எதிர்ப்புக்கள், பயமுறுத்தல்கள். நான் அப்போது பஞ்சாயத்துத் தலைவராக இருந்தேன். டி. எஸ். பி. மனோகரன் அவர்கள் எனக்கு லைசென்ஸ் வாங்கிக் கொடுத்துத் துப்பாக்கியும் கொடுத்திருந்தார்.

''கிராமம் சிறிது சிறிதாகச் சீரடையத் தொடங்கியது. சாராயம் காய்ச்சுபவர்கள் விவசாயத்துக்குத் திரும்பினார்கள். குடும்பங்கள் வறுமை நீங்கிச் செழிக்கலாயின...'' திரு ஜெயவீர பாண்டியன் நிறுத்தியதும் கிராமத்தின் முக்கியஸ்தர்களில் ஒருவரான திரு தெய்வகண் தொடரலானார்.

''சமீப காலத்தில் இந்நிலையில் ஓரளவு மாற்றம். சிலபேர் வேறிடங்களில் குடித்துவிட்டுச் சத்தம் போடாமல் வீடுகளில் வந்து படுக்கலாயினர். விஷயம் அறிந்து வீட்டைத் தட்டி



**வித்தியாசங்கள்**

கடவுள் மண்ணையும் சுமந்தார்
பிட்டையும் தின்றார்
ஆனால் மனிதனோ
பிட்டைத் தின்ன மட்டுமே விரும்புகிறான்
—குன்றக்குடி அடிகளார் சொல்லிக்கேட்டு ரசித்தவர்
வ. தேனப்பன்

---

வாயால் ஊ.நச் செய்து குடித்தவர்களைக் கண்டுபிடித்து அபராதம் போடலானோம்.

''ஜனநாயக மரபுகளை மடக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒவ்வொரு குடும்பத்தி லிருந்தும் ஓர் ஆண் கண்டிப்பாக வரவேண்டும் என்று அழைப்பு விடுத்து இப்பிரச்னைக்குத் தீர்வு காண 22-6-80 அன்று கிராமப் பஞ்சாயத்துக் கூடியது.

''மதுவிலக்கை இங்கு எடுத்துவிட வேண்டும் என்று சிலர் பேசினர். மதுவிலக்கு அமுல் படுத்துவதற்கு முன் அத்திமரப்பட்டி இருந்த சூழ்நிலையைப் பற்றி நாங்கள் பேசினோம்.

''வோட்டெடுப்பு மூலம் இதற்கு முடிவு காணலாம் என்று தீர்மானித்துப் பொதுத் தேர்தல் போலவே தேர்தல் நடத்தினோம்.

''தற்போது அமுலில் இருக்கும் மது விலக்குக் கொள்கைக்கு ஆதரவாகத் தொண்ணூறு சதவிகிதத்தினர் வாக்களித்து அத்திமரப்பட்டியைக் காப்பாற்றினர்'' என்றார் தெய்வகண்.

திரு ஜெயகோபால் தொடர்ந்தார்:

''மதுவிலக்குக் குழுவுக்கு இரண்டாவது தலைவராக ஞானஒளிவு நாடார் இருந்தார். தற்போது திரு வி. நாராயணன் தலைவர். இவர்களும் பஞ்சாயத்துத் தலைவர் திரு ஜெயவீர பாண்டியனும் டி. எஸ். பி. மனோகரனின் உதவியுடனும், மற்றைய கிராமத் தலைவர்கள் ஒத்துழைப்புடனும் செய்துவரும் சேவை மகத்தானது.

''ஊர் நலன்தான் முக்கியம்' என்ற குறிக்கோளில் எல்லா அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களும் இங்கு அரசியலை ஒதுக்கிவிட்டு, செயல்படுவது போன்று எங்கேயும் காண முடியாது.

''அரசு பஞ்சாயத்தைக் கலைத்துவிட்ட நிலையிலும் இங்கு பஞ்சாயத்து நடக்கிறது. மக்கள்பஞ்சாயத்துக்கு அடங்கிநடக்கிறார்கள், பஞ்சாயத்தில் எல்லாக் கட்சியாளர்களும் இணைந்து செயல்படுகிறார்கள். அத்திமரப் பட்டியின் பெருமைக்கு இதுவே சான்று''

**ப**ஞ்சாயத்துத் தலைவர் ஜெயவீர பாண்டியன்மேலும்தொடர்ந்தார்:''சென்ற ஆண்டு பிரார்த்தனை நடந்து கொண்டிருக்கும் போது மழையினால் இவ்வூர் மாதா கோவில் திடீரென்று இடிந்து விழுந்து விட்டது. பெரிய விபத்துத்தான். தெய்வா தீனமாக உள்ளிருந்த சுமார் 40 பேர்களில் எவருக்குமே ஆபத்தில்லை. அத்திமரப்பட்டியில் கிறிஸ்தவக் குடும்பங்கள் சிறுபான்மை தான். ஆனாலும் ஜாதி மதம் பாராமல் ஒவ்வொரு குடும்பமும் ரூ 50, ரூ 100 என்று கொடுத்து மாதா கோவில் மறுபடியும் கட்ட உதவிய செயல் அபூர்வமானது.

''போலீசுக்குப் போகாமல் பெரும்பாலும் எல்லா கிராமத்து வழக்குகளுமே பஞ்சாயத்தால் தீர்க்கப்படுகின்றன. தண்டிக்கப்படுபவர்கள் குற்றத்துக்குத் தகுந்தபடி இருபது, ஐம்பது என்று தேங்காய்களை வாங்கி நான்கு தெருக்கள் சுமந்து வந்து கோவிலில் அவர்களாக உடைக்க வேண்டும். 5, 10 லிட்டர் என்று கோவிலுக்கு எண்ணெய் செலுத்துவதும் அபராதமாக விதிக்கப்படுகிறது.

''பஞ்சாயத்தில் சேரும் பணத்தைக் கிராம அபிவிருத்திக்காகச் செலவிடுகிறோம்.

''மதுவிலக்குக் கொள்கையில் எங்கள் கிராமம் கொண்டுள்ள தீவிரத்தைப்பாராட்டி மாவட்டக் கலெக்டர், கிராம குடிநீர் வசதித் திட்டத்துக்காகச் சமீபத்தில் ரூபாய் அறுபது ஆயிரம் சாங்ஷன் செய்துள்ளார்.

''சரியான ரோடு இல்லாதது, மருத்துவ வசதி கிராமவாசிகளுக்கோ, கால்நடைகளுக்கோ அறவே இல்லாதது அத்திமரப் பட்டியின் மிகப் பெரிய குறைகள்.

இவர்களது கூற்றுக்களின் தன்மையை ஆராய அத்திமரப்பட்டியைச் சுற்றி வந்தேன்.

குளித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த அன்னத்தாயி என்ற பெண்மணியை நிறுத்திக் கேட்டபோது, ''நா இருபத்து ரெண்டு வருஷமா இங்கு இருக்கேங்க. முன்னெல்லாம் பொம்பளெங்க தைரியமாக் காடு கரைக்குப் போய் வர முடியாது. அங்கங்கே குடிச்சிட்டுக் கிடப்பாங்க.... இப்பத்தாங்க கிராமம் நல்லா இருக்கு'' என்றார்.

பலரும் இதே மாதிரிதான் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறினர்.

திரும்பியபோது ஒரு வழக்கை விசாரிக்கப் பஞ்சாயத்துக் கூடியிருந்தது.

வழக்கின்போது காரசாரமான விவாதங்கள். உரத்த குரல்கள். வழக்கின் முடிவில் வழக்காட வந்தவர்களிடையே சமரசத்தை ஏற்படுத்தி ஒருவர் மற்றவருக்கு வெற்றிலை பாக்குக் கொடுக்கச் செய்ததும், நேயமான பேச்சுக்கள், மகிழ்ச்சி முகங்கள்.

''மதுவுக்கு எதிராக அத்திமரப்பட்டி மக்கள் நடத்திய போராட்டங்களைத் திரு பெருமாள் வில்லுப் பாட்டாக அமைத்திருக்கிறார். இதனைச் செல்வி கோமதி பாட அரங்கேற்றப் போகிறோம்'' என்று ஒருவர் குறிப்பிட்டார்.

ஒரு சிறிய கிராமத்தின் எளிய மக்கள் மிகப் பெரியதோர் இயக்கத்தை நடத்தி வெற்றி கண்டுள்ளதைக் கண்டபோது மகாத்மா காந்தியும், ராஜாஜியும் இன்றில்லையே என்ற ஏக்கம் என்னுள் வெகு நேரம் வரை தங்கி நின்றது.

பேட்டி: நாயகன்
புகைப்படங்கள்: மன்னை மூர்த்தி



மாதிரி 'மருந்து' உட்கொண்டிருக்கக் கூடும் என்ற அபிப்பிராயம் நிலவிற்று.

Amphetamine என்ற மருந்து வகையைக் கார் ரேஸில் பங்கேற்பவர்களும், மல்யுத்தக்காரர்களும் போட்டிக்கு முன்பாக உட்கொள்வதாகக் கூறப்படுகிறது.

ஆம்ஃபிடாமின் பசியை அடக்கி, மூச்சு விடுவதையும் இருதயத் துடிப்பையும் அதிகப்படுத்தி மூளையை விரைவாகச் செயல்படுத்த உதவுவதாக இவ்வீரர்கள் நம்புவதாலேயே போட்டிகளுக்கு முன்பாக உட்கொள்கின்றனராம்.

மெதாம்ஃபிடாமின் ஹைட்ரோகுளோரைட் என்ற மருந்து 5 மில்லி கிராம் எடையில் டெஸோக்ஸின் (Desoxyn) என்ற பெயரில் (மருந்தடிமைப் பழக்கம் உள்ள மாணவர்களிடையே இதுதான் 'ஸ்பீட்' (Speed) எனப்படுகிறது.) விற்கப்படுவதைத் தட்டெறியும் நிபுணர்கள், மல்யுத்த வீரர்கள், கூடைப் பந்து ஆட்டக்காரர்கள் போட்டிகளுக்கு முன்பாக உட்கொள்கின்றனராம்.

கால் பந்தாட்ட வீரர்கள் மருந்தடிமைப் பழக்கத்துக்கு ஆளாவதற்கு அவர்களது மனைவிமார்களே பெரும்பாலும் காரணமாகின்றனர். பகலில் கால்பந்தாட்டப் போட்டிகளில் பங்கேற்கும் இவ்வீரர்களுக்கு இரவு வேளையில் சோர்வும் களைப்பும் ஏற்படுவதால் தங்கள் கணவன் இரவில் தங்களுடன் உற்



# மருந்தடிமைப் பழக்கம்

விளையாட்டு வீரர்கள், போட்டிகளுக்கு முன்பாக மருந்துகள் உட்கொண்டு, உடல் திண்மையையும், தாங்கும் சக்தியையும் அதிகரிக்கச் செய்து போட்டிகளில் வெற்றி பெற முயல்வதாகப் பரவலாக நம்பப்படுகிறது. அதிலும் ஒலிம்பிக் போன்ற முக்கியத்துவம் வாய்ந்த விளையாட்டுப் போட்டிகளில் இவ்வழிமுறை தீவிரமாகக் காணப்படுகிறதாம்! Anabolic Steroid என்ற மருந்து வகைகள் சர்வ தேச ஒலிம்பிக் கமிட்டியால் தடைவிதிக்கப்பட்டவையாகும். ஆனாலும் ஒலிம்பிக் போட்டிகளிலும், மற்ற சர்வதேச விளையாட்டுப் போட்டிகளிலும் விளையாட்டு வீரர்கள் இதனைப் போட்டிக்கு முன்பாகப் பெரும்பாலும் உட்கொள்கின்றனர்.

1976ம் ஆண்டு மான்ட்ரீயில் நடந்த ஒலிம்பிக்கின்போது 345 பவுண்ட் எடை கொண்ட ரஷ்ய நாட்டுப் பளு தூக்கு வீரர் வாஸிலி அலெக்ஸியேவ் 562 பவுண்டு எடையைத் தூக்கி ஓர் உலக சாதனை ஏற்படுத்தினார். இப்போட்டியின்போது திரு அலெக்ஸியேவின் கண்களையும், உடற்கூறையும் பார்த்தால் அவர் நிச்சயம் போட்டிக்கு முன்பாக Steroid மருந்து வகையை உட்கொண்டே வெற்றி பெற்றிருக்க வேண்டும் என்று அமெரிக்க நாட்டு ஒலிம்பிக் தட்டெறியும் நிபுணர் திரு ஜார்ஜ் ஃபென் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். அதே ஒலிம்பிக்கில் கிழக்கு ஜெர்மனியைச் சேர்ந்த நீச்சல்காரிகளும் இம்

சாகமாய் இருக்க Speed மாத்திரைகளை இம்மனைவிமார்கள் கணவன்மார்களை உட்கொள்ளச் சொல்கின்றனராம்.

பேஸ் பால் விளையாட்டு வீரர்களிடையே கோகெய்ன் (Cocaine) சமீப காலத்தில் பிரபலமாகியுள்ளதாம். அதே மாதிரி ஓட்டப் பந்தய வீரர்கள் 'க்வாலூட்' (Quaalude) என்ற போதை மருந்தைச் சமீப காலத்தில் அதிகமாக உட்கொள்கின்றனராம்.

அமெரிக்க நாட்டின் ஒலிம்பிக் விளையாட்டு மருத்துவக் கமிட்டித் தலைவர் இர்விங் டார்டிக் "பெரும்பாலான விளையாட்டு வீரர்களும் 'மருந்து' உட்கொண்டு போட்டிகளில் பங்கேற்பதை விரும்புவதில்லைதான். ஆனாலும் தன்னோடு போட்டியிடும் எதிராளி இம்மாதிரி மருந்துகளை உட்கொண்டு போட்டியில் ஈடுபடுவானோ என்ற பயம் காரணமாகப் பலரும் உட்கொள்கின்றனர்" என்கிறார்.

இம்மாதிரி மருந்துகள் உட்கொள்வது அடிப்படை விளையாட்டு நெறிகளுக்கு முரணானவை மட்டுமின்றி நாளாவட்டத்தில் விளையாட்டு வீரர்களின் உடல் நலனைப் பெரிதளவில் பாதிக்கிறது என்பதால் சர்வதேச அளவில் விளையாட்டு நிர்வாகிகள் இப்பிரச்னை குறித்துக் கவலை கொண்டுள்ளனர். இம்மருந்துப் பழக்கத்தை தவிர்க்க என்னென்ன வழிமுறைகளைக் கையாளலாம் என்று சிந்தித்து வருகின்றனர்.

— பி. ரங்க[illegible]

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு